# மற்றவர்களை விட முன்னி லிருக்க வழி...

எதிர்காலமுழுதும் இவளை முன்னிலிருக்கச் செய்யுங்கள். பணவசதி குறைவுகாரணமாக வாழ்க்கையில் இவள் முன்னேறுவது தடைப்படாமலிருக்க, இவளுக்கென்று தவறாமல் பணம் சேமித்து வாருங்கள்.

யூகோ பாங்கில் சேமியுங்கள், உங்கள் பணம் பெருகி, உங்களுடைய அன்புக்குழந்தைகளின் இன்பகரமான எதிர் காலத்திற்கு உத்தரவாதம் அளிக்கும். நீங்கள் சிறு தொகையான ரூ 5/- க்கு யூகோ பாங்கில் ஒரு சேமிப்புக் கணக்குத் தொடங்க முடியும்.






தலைமை ஆபீஸ்:
கல்கத்தா

நீங்கள் பணம் சேமிக்கலாம்,
யுகோ பாங்க் உங்களுக்கு
உதவி செய்ய முடியும்.

ASP/UCO-1/69



சுதந்திர கட்சியைச் சார்ந்த ஸ்ரீ எம். கே. ரங்கசாமி அவர்கள் புதல்வி செல்வி: **இந்திரா** M. A.,வுக்கும், பிரபல பேராசிரியர் ஸ்ரீ டி. ஆர். புருஷோத்தமன் அவர்கள் குமாரர் செல்வன்: **பி. வி. ராகவன்** M. A.,க்கும் 9-6-69 அன்று தியாகராயநகர் ''சுந்தர்பாக்''கில் திருமணம் மிக விமரிசையாக நடைபெற்றது. ராஜாஜி ஆசிகூற பல பிரமுகர்கள் நேரில் வந்து ஆசீர்வதித்தனர்.

வாழ்க மணமக்கள் !



பம்பாய் விளம்பர ஏஜென்ஸி மெஸர்ஸ் அட்வர்ட்ஸ் பிரைவேட் லிட்., ஸ்தாபனத்தைச் சார்ந்த ஸ்ரீ கே. நாராயண சுவாமி அவர்கள் குமாரத்தி சௌ. அல்லி என்கிற **மீனாக்ஷி** B. Sc.,க்கும், பெங்களூர் அட்வர்டைஸிங் கம்பெனி ஸ்ரீ எஸ். எஸ். சுப்பன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **நாகராஜன்** B. E. (Mech.)க்கும் சமீபத்தில் மதுரையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !



ஸ்ரீ B. தியாகராஜன் அவர்கள் சகோதரர் சிரஞ்சீவி B. **சீனிவாசன்** அவர்களுக்கும், ஹொனரா R. Y. சுவாமி அவர்கள் மருமான் சௌ. **ராதாவுக்கும்** ஸ்ரீரங்கத்தில் 6-6-69ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

**வாழ்க மணமக்கள் !**



ஸ்ரீ எஸ் சுந்தரம் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி **கிரிஜாவுக்கும்**, சேலம், ராவ் பகதூர் A. S. நாராயண அய்யர் அவர்கள் பேரன் சிரஞ்சீவி A. S. **நாராயணன்** அவர்களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

பறக்காத பறவை – தேசியப் பறவை



வேலை செய்யாத மிருகம் –
தேசிய மிருகம்



பலன் தராத திட்டம் –
ஐந்தாண்டு திட்டம்



வன விலங்குகள் அழிக்கப்பட்டு வருகின்றன என்று
யார் சொன்னது?








தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 28 □ இதழ் 51

# போதனை மொழி—விவேகம் தேவை

எதையும் மிகைப்படுத்திக் கூறுவதால் நன்மையும் விளையலாம், தீமையும் விளையலாம். தமிழை மிதமிஞ்சி வலியுறுத்துவதால் ஆங்கிலத்தில் தகுதி பெறுவது பாதிக்கப்படுகிறது.

இந்தியா அனைத்துக்கும் இணைப்பு மொழியாக ஹிந்தி திணிக்கப்படுவதை எதிர்த்துத் தமிழ் நாடு சுறுசுறுப்பாகப் போரிட்டு வருகிறது. அரசாங்க வேலைக்கு ஆங்கிலந்தான் இனியும் இணைப்பு மொழியாக இருக்க வேண்டுமென்று தமிழ் நாடு விரும்புகிறது. இந்த நோக்கம் நிறைவேற வேண்டுமானால் ஆங்கிலத்தில் நமது சிறுவர் சிறுமியரின் தகுதியை வளர்க்க வேண்டுமே ஒழியக் குறைக்கலாகாது.

நான்கு வயது ஆவதற்கு முன்னமேயே குழந்தைகள் எவ்வாறு தாய் மொழியைக் கற்றுக் கொள்கின்றன? பொருட்கள், செயல்கள் ஆகியவற்றுடன் சொற்களைத் தொடர்ச்சியாக இணைப்பதன் மூலம் அவை மொழியைக் கற்றுக்கொள்கின்றன. மொழியை ஒரு சாதனமாக உபயோகிப்பதன் மூலம்தான் ஒவ்வொரு குழந்தையும் பேசக் கற்றுக் கொள்கிறது. நிகழ்காலம், இறந்தகாலம்; ஆண்பால், பெண்பால் முதலியவற்றைச் சரியாகச் சொல்லத் தெரிந்து கொள்கிறது. தாய்மொழியைச் சுலபமாகக் கற்றுக் கொண்டு மேலும் மேலும் திருத்துவதற்குக் குடும்பம் வாய்ப்பையும் வசதியையும் அளிக்கிறது. பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும் அதே மாதிரி பணி புரிகின்றன. ஆனால் விசேஷ முயற்சியின் மூலமாகத்தான் ஓர் அந்நிய மொழியில் தகுதியைப் பெற முடியும். தாய்மொழியில் தகுதி பெறுவதற்கு வேண்டிய முயற்சிகளைவிட அதிக முயற்சி இதற்குத் தேவைப்படுகிறது.

எனவே, ஹைஸ்கூல்களிலும், கல்லூரிகளிலும் பெரும்பாலான விஷயங்களை ஆங்கிலத்தின் மூலமாகத்தான் போதிக்க வேண்டும் என்று ஏற்படுகிறது. விஷயத்துடன் சம்பந்தப்படுத்தாமல் இலக்கணத்தையும் அகராதியையும் வைத்துக் கொண்டு மொழியைப் பயில முடியாது. பயிற்சிக்கு விஷய இணைப்பு தேவை. ஹைஸ்கூல்களிலும் கல்லூரிகளிலும் ஆங்கிலத்தில்தான் பெரும்பாலான விஷயங்களைப் போதிக்க வேண்டும் என்றால் அது அந்நிய மொழிக்கு வணக்கம் செலுத்துவதாக ஆகாது. ஆங்கிலத்தில் பயில்வது தென்னிந்தியாவில் உள்ள இள வயதினருக்கு நடைமுறையில் அத்தியாவசியமானது. ஆங்கிலம் வகித்து வந்துள்ள இடத்தில் ஹிந்தியைத் திணிப்பதற்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் வலுத்து வரும் நிர்ப்பந்தத்துக்குப் பணியாமல், அகில-இந்திய விவகாரங்களில் தென்னிந்திய இளைஞர் நியாயமான பங்கு பெற வேண்டுமானால், ஆங்கிலத்தில் பயிற்சி பெறுவது அத்தியாவசியம்.

ஒரு விஷயத்தை ஆங்கிலத்தில் பயிலும் போது மாணவர்களுக்கு விளக்கம் தரும் வகையில் தாய் மொழியைப் பயன்படுத்துவதற்குத் தடை ஏதும் கிடையாது. நான் இதைத்தான் நெடுகச் சொல்லிக் கொண்டு வந்திருக்கிறேன்.

மொழிப் பற்று வேறு, ராஜீய விவேகம் வேறு. நான் கோருவது ராஜீய விவேகமும் பகுத்தறிவுடன் கூடிய சிந்தனையும்தான். மொழியன்பு கலை வகையைச் சேர்ந்தது, உணர்ச்சியைத் திருப்தி செய்விக்க வல்லது. தென்னிந்தியாவின் ராஜீய மதிப்புக்கும் இளைஞர்களின் வேலைவாய்ப்பு வசதிகளுக்கும் கேடு விளையாத வகையில், தாய்மொழிப் பற்றை வளர்க்க முடியும். தாய்மொழி, இசையையும் சித்திரத்தையும் போல் இன்பம் பயக்கிறது. அதைச் சுவைத்துக் கொண்டே தேவைப்படுகின்ற விசேஷ கவனத்தை ஆங்கிலத்துக்கு அளிக்க வேண்டும். தாய்மொழியை எல்லா வகைகளிலும் நேசிப்போம், சுவைப்போம், வளர்ப்



**ஆசாரியர் அருள்வாக்கு**

கங்கை, கடல் முதலிய தீர்த்தங்களில் நீராடி என்ன, விரதங்கள் இருந்து என்ன, தானங்கள் செய்து என்ன, நூறு பிறவி எடுத்தும் ஞானமில்லையானால் முக்தி இல்லை.

போம். ஆனால் தென்னிந்தியா எதிர்நோக்கிச் சமாளித்தாக வேண்டிய அபாயங்கள் விஷயத்தில் ஜாக்கிரதைக் குறைவு கூடாது.

விஞ்ஞானத்திலும், தொழில் நுட்பத் துறையிலும் போதிய தகுதி உள்ளவர்கள், மக்களுக்கு எளிதில் விளங்கக் கூடிய நூல்களைத் தாய்மொழியில் எழுதி வெளியிடட்டும். பிரதேச மொழிகளை வளப்படுத்த இதுவே வழி. அவசரம் அவசரமாகச் சிருஷ்டிக்கப்படும் புதிய சொற்றொடர்களை உபயோகித்து, பள்ளிக் கூடங்களிலும், கல்லூரிகளிலும் பயிற்சி மொழிகளாகத் திணிப்பதன் மூலம் அவை வளமுற முடியாது.

தமிழ், கன்னடம், மலையாளம், தெலுங்கு ஆகியவற்றின்பால் உள்ள அன்பின் காரணமாக, அகில இந்தியாவில் நாம் சிறுபான்மையோர்தான் என்பதை மறந்துவிடலாகாது. மொழி வெறியும் விடாமுயற்சியும் உள்ள ஒரு பெரும்பான்மையோரை எதிர்த்து இந்தச் சிறுபான்மையோர் போரிட வேண்டியிருக்கிறது. தில்லியில் உள்ள சர்க்கார் அந்தப் பெரும்பான்மையோருக்குப் பின்பலமாக இருந்து வருகிறது. இந்தியா அனைத்துக்கும் ஆங்கிலம்தான் இணைப்பு மொழியாக நீடிக்க வேண்டும் என்று நாம் தீர்மானித்துள்ளோம். அப்படி நடைபெற வேண்டுமானால் சிறுபான்மையினரான தென்னிந்தியர், விவேகத்துடன், விழிப்புடன், சுறுசுறுப்பாகக் கடும் போர் நடத்தவேண்டியிருக்கும். நியாயத்தை உறுதி செய்யக்கூடிய மொழியாகிய ஆங்கிலம் இணை மொழியாக நீடிக்க வேண்டும் என்பதுதான் நமது குறிக்கோள். அதை மறந்து முயற்சிகளைத் தளர்த்தலாகாது. உணர்ச்சிக்கு அடிமைகளாகி விடலாகாது. தவறிழைத்தோமானால் போராட்டத்தில் தோல்வியுறுவோம்.

ஆரம்ப வகுப்புக்களில் எல்லாமே தாய் மொழியில்தான் போதிக்கப்பெற வேண்டும். குழந்தைகள் மேல் வகுப்புக்களுக்குச் செல்லும்போது விஷயங்களுடன் இணைந்த ஆங்கிலத்தைப் போதிக்க வேண்டும். அதாவது பல விஷயங்களைப் போதிக்கையில் ஆங்கிலத்தைப் பயிற்சி மொழியாகப் பயன்படுத்த வேண்டும்.

தென்னிந்திய இளைஞர்களின் நம்பிக்கையும், வசதி வாய்ப்புக்களும் ஆங்கிலத்தில் தகுதி பெறுவதையே பொறுத்திருக்கின்றன. இந்தியாவின் ஒற்றுமைக்கும், உலக ஒற்றுமைக்கும் கூட இது தேவையே.

தென்னிந்திய ஹைஸ்கூல்களிலும் கல்லூரிகளிலும் பயிற்சி மொழி பற்றி நான் சொல்வது மேற்கு வங்காளத்துக்கும், ஹிந்தியை விட ஆங்கிலத்தைச் சிறந்த இணைமொழியாக மதிக்கின்ற பிற பகுதிகளுக்கும் முற்றிலும் பொருந்தும்.

(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியதன் சுருக்கம்.)

# கம்யூனிஸ்ட் திட்டம்

கம்யூனிஸ்டுகள் மந்திரிகளாக இருப்பது மக்களுக்கு நன்மை செய்வதற்காக அல்ல என்பதை அவர்களே ஒப்புக் கொண்டு விட்டார்கள். உள்ளே இருந்து கொண்டு அரசியல் சாஸனத்தைத் தகர்ப்பதுதான் அவர்களது பணியாம். அதிருப்தியையும், குழப்பத்தையும் வளர்த்து மோசடி செய்து அதிகாரத்தை முழு அளவில் கைப்பற்றிக் கொள்வதுதான் அவர்களுடைய திட்டமாம். நம்பூதிரிபாடு, 'ஏ. கே. கோபாலன், ரணதிவே போன்றோர் அதைச் சந்தேகமறக் கூறிவிட்டார்கள்.

கம்யூனிஸ்டுகள் பதவி வகிக்கும் கேரளத்திலும், மேற்கு வங்காளத்திலும் அராஜகம் தலை விரித்தாடுகிறது. பெருங் குற்றங்கள் நிகழ்கின்றன. ஆனால் நடவடிக்கை எடுப்பது அரிதாகி வருகிறது. சட்டத்தின் ஆட்சியை உறுதி செய்யும் முதற் கடமை சர்க்காருடையது. ஆனால் அதை நடத்தி வைப்பதில் கம்யூனிஸ்டுகளுக்கு அக்கறை இல்லை.

இடது கம்யூனிஸ்டுகள் தந்துள்ள கொள்கை விளக்கத்தில் புதிது ஒன்றுமில்லை. இவ்வளவு வெளிப்படையாக இந்நாட்டில் இப்பொழுது சொல்வதுதான் புதுமை; ஜனநாயக வாதிகள் என்று சொல்லிக் கொண்டு அவர்களுடன் சேர்ந்து பணியாற்றுவதற்கு ஆட்கள் கிடைத்திருப்பது புதுமையிலும் புதுமை.

வலது கம்யூனிஸ்ட் கட்சி ரஷ்யச் சார்புடையது. இடது கட்சி சீனச் சார்புடையது. நக்ஸல்பாரி பிரிவு மா சே துங்குடைய கொரில்லாத் தத்துவங்களைச் சார்ந்துள்ளது. மூன்றுமே இந்தியா சம்பந்தப்பட்டவரை நாட்டுப் பற்று இல்லாத ஜனநாயக விரோதக் கட்சிகள்தான். இதைத் தலைவர்கள் புரிந்து கொண்டால்தான் நாட்டுக்கு நன்மை.

# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்தியாவுக்கு எதிராகச் சீனவுடன் பாகிஸ்தான் சதி செய்வது சுலபமாக இருக்கும். அதில் ஓர் ஆசையும் கூடப் பிறக்கலாம். ஆனால் பாகிஸ்தானி மக்கள் இதற்கு எதிரிடையாகத் தம் நிலையை வற்புறுத்தியாக வேண்டும். பார்லிமெண்டரி ஜனநாயகத்தின் கீழ் இந்துக்களின் மெஜாரிட்டி உள்ள ஆதிக்க ஆட்சியைத் தவிர்ப்பதற்காக இந்தியாவிலிருந்து சில முஸ்லிம்கள் விலகிக் கொண்டார்கள். பேராசை பிடித்த ஏகாதிபத்திய சீனவின் கீழ் வாழ்வதை அவர்களால் ஏற்றுக்கொள்ள இயலாது.

★

''காஷ்மீர் மலைப் பிராந்தியம்; ஒரு பெரிய கோட்டை போன்ற அமைப்பு. எனவே தர்மகர்த்தாப் பொறுப்பாளர்களிடம் அதைக் குறிப்பிட்ட காலத்துக்கு விட்டு வைத்து, எதிர்கால ஆட்சி பற்றி பின்னர் பொதுஜன வாக்கின் மூலம் அல்லது வேறு வகையில் முடிவு செய்யலாம் என்பது, பாதுகாப்பு நோக்கில் இந்தியாவுக்குச் சரிப்படாது'' என்று சிலர் நினைக்கிறார்கள். கல் சுவர்கள் சிறையாகிவிட மாட்டா. அவை கோட்டை அமைப்பாகவும் இருக்க முடியாது. அந்தப் பகுதியில் வசிக்கும் மக்களின் இதயங்கள் தாம் கோட்டைகளாக வேண்டும். அவர்கள் நேசப் பான்மையுடன் இருக்கிறார்களா? இதைப்பற்றி விசாரிப்பதற்கு அவசியமேயில்லையா? அப்படியானாலும் பொதுஜன வாக்கெடுப்பை இப்போதே நடத்தி விவகாரத்தை முடித்து விடலாமே? இத்தாலியத் தலைவர் முசோலினி சில நாடுகளை வட ஆப்பிரிக்காவில் கைப்பற்றி இருந்தார். அவற்றை மீட்டு இரண்டு அன்னிய வல்லரசுகளிடம் தர்மகர்த்தாப் பொறுப்பாக ஒப்படைத்து, பிறகு சுதந்திரம் வழங்கினார்கள். காஷ்மீர் விஷயத்தில் நான் இப்போது சொல்வது போலத்தான் அன்று நடந்தது. பாதுகாப்பு என்பது மலைகளைப் பொறுத்ததல்ல. அந்தப் பிரதேசத்தில் வாழும் மக்களையும் அவர்கள் தரக்கூடிய ஆதரவையுமே அது பொறுத்தது.

★

சர்க்கார் மான்யங்கள், அரசாங்க நடவடிக்கை இவற்றை எதிர்பார்த்தே வாழ்வது என்பது இந்நாளில் மிகவும் அதிகரித்திருக்கிறது. பணக்காரர், ஏழை யாரானாலும் இப்படிச் சர்க்காரை நம்பியே காலத்தை ஓட்டுகிறார்கள். சேவை புரியத் தாமாகவே முன் வருவது என்பது அநேகமாக அடியோடு மறைந்து விட்டது. இது ஒழுக்கக் குறைவின் ஓர் அடையாளமேயாகும். டில்லியில் எனது சகாவாக இருந்த திரு அஜீத் பிரசாத் ஜெயின் அண்மையில் சென்னைக்கு வந்திருந்தபோது என்னைச் சந்தித்தார். மேற்சொன்ன என்னுடைய கருத்தை (விசனமளிக்கும் எண்ணத்தை) அவர் முழுமையாக ஒப்புக்கொண்டார். மக்களுக்குச் சர்க்கார் மூலமாகச் சேவை புரிவது என்பதில் ஏகப்பட்ட பணம் விரயமாகிறது. இதற்காக ஏகப்பட்ட வரிகளைச் சர்க்கார் விதிக்க வேண்டியிருக்கிறது. இவை இரண்டும்தான் சுதந்திரத்துக்குப் பிறகு நடைபெறும் ஆட்சியில் நாம் காண்பவை. முன்பெல்லாம் கஷ்ட நிவாரணம் என்றால், மக்கள், துயர் துடைக்கத் தாமாகவே முன்வருவார்கள்; நன்கொடைகள் வசூலிப்பார்கள்; பரவலாக உதவி அளிப்பார்கள் என்பதை நினைவுபடுத்திக் கொண்ட திரு அஜீத் பிரசாத் ஜெயின், இன்றைய நிலையுடன் அதனை ஒப்பிட்டுப் பார்த்து வருந்தினார். இப்போதெல்லாம் மக்கள் மேற்கொள்ளும் ஒரே காரியம் சர்க்காருக்கு வேண்டுகோள் விடுப்பதுதான் என்று திரு ஜெயின் கூறினார். நான் இதை ஒப்புக் கொண்டேன்.

# தமிழகம் தந்த தொழில் மேதை




சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது.

சென்னை மாநில அரசாங்கத்தின் மின்சார இலாகா மின்சார விநியோகத்துக்குத் தேவையான சில சாதனங்களைச் சப்ளை செய்து அவற்றைக் குறிப்பிட்ட ஸ்தலத்தில் அமைத்துக் கொடுக்க ஒரு ''டெண்டர்'' கோரி விளம்பரம் செய்திருந்தது.

இத்துறையில் ஈடுபட்டிருந்த பலர் இதற்கு ''டெண்டர்'' கொடுத்தனர். அவர்களுடன் திரு கே. ஈசுவரனும் ஒரு டெண்டர் அனுப்பியிருந்தார். அதற்குப் பத்துப் பதினைந்தாண்டுகளுக்கு முன்னர்தான் திரு கே. ஈசுவரனும் அவரது நெருங்கிய உறவினருமான திரு கே. ஆர். சுந்தரமய்யரும் தொழில் நடத்தச் சென்னைக்கு வந்து, சைக்கிள், மூன்று சக்கர வண்டி, மோட்டார் சைக்கிள் முதலியவற்றை விநியோகம் செய்யும் துறையில் தொழில் நடத்திக் கொண்டு, இதில் புகழும் அனுபவமும் அடைந்திருந்தனர். புதுத் துறையில் பிரவேசிக்கலாமே என்ற ஆர்வத்தில் தமது உற்சாகத்தையும் அனுபவத்தையும் துணையாகக் கொண்டுதான் மின்சார இலாகாவுக்கு டெண்டர் கொடுத்தார் திரு கே. ஈசுவரன்.

டெண்டர்களைப் பரிசோதித்த அதிகாரி திரு ஈசுவரனைப் பார்த்துச் சொன்னார்:

''உமக்குத் திறமை இருக்கிறது, அனுபவமும் இருக்கிறது. இந்த வேலையைப் பூர்த்தி செய்து கொடுக்க உம்மால் முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது.''

இதைக் கேட்ட ஈசுவரனின் உள்ளம் மகிழ்ந்தது. கோரி வந்த 'ஆர்டர்' கிடைத்து விடப் போகிறது என்ற உற்சாகம். ஆவலே உருவாக, மேற்கொண்டு அதிகாரி கூறப் போவதற்கு உடம்பெல்லாம் செவியாகக் காத்திருந்தார். அதிகாரி தொடர்ந்தார்:

''ஆனால்....ஆனால்... ஆர்டரை உமக்குக் கொடுப்பதற்கில்லை.''

ஈசுவரனின் உற்சாகம் காற்றாய் மறைந்தது. ''ஏன்?'' என்ற கேள்விக் குறி பார்வையிலேயே தொனித்தது. அதிகாரி சொன்னார்:

''நீர் சைக்கிள் விநியோகம் செய்யும் வியாபாரி. மின்சாரத் துறையில் நுழைந்து கண்ட்ராக்டுகள் நடத்துவதற்கு உங்களுக்கு என்ஜினீயரிங் பட்டங்களோ தகுதிகளோ ஒன்றுமில்லை. இலாகா விதிகளின்படி உங்களுடைய டெண்டர் குறைந்த தொகைக்கு இருந்தாலும் அதை ஏற்பதற்கில்லை.''

ஒருகணம் திகைத்தார் ஈசுவரன். 'சட்டம் ஒரு கழுதை' என்று யாரோ ஓர் ஆங்கிலேயன் சொன்னானும். ஆங்கிலேயரின் அரசாட்சி தானே இங்கு நடக்கிறது! இதுதான் அவருக்கு நினைவுக்கு வந்தது. சிந்திக்கச் சற்று அவகாசம் வேண்டும் என்று கேட்டுப்பெற்றார்.

ஈசுவரனின் மூளை தீவிரமாக இயங்கிற்று. பொறி இயல் நிபுணர் ஒருவரை வேலைக்கு அமர்த்திக் கொண்டார். ''ஈசுவரன்'' என்று தமது பெயரைத் தாங்கிய காகிதத்துக்குப் பதில், ''ஈஸன் என்ஜினீரிங் கம்பெனி'' என்று உயர்ந்த காகிதத்தில் கண்ணைக் கவரும் வகையில் ஒரு புதிய 'லெட்டர் பேப்பர்' தயாரித்தார். இலாகா அவசியம் என்று கருதிய தகுதியை 'லெட்டர் பேப்பர்' மூலம் உண்டாக்கி விட்டார். தாம் கொடுத்த 'டெண்ட'ரை இப்புதுப் பெயரில் சமர்ப்பித்தார். சட்டத்தின் விதிகள் நிறைவேற்றப் பட்டன. ஒரு புதிய என்ஜினீயரிங் கம்பெனி சென்னையில் தோன்றிற்று. மின்சார விநியோகத் துறையில் உபகரணங்களை விற்கவும், அவற்றை நிறுவிக் கொடுக்கவும் ''கண்டிராக்ட்'' வேலைகளை எடுத்து நடத்தவும் 1939ம் ஆண்டில் இப்படித்தான் தோன்றியது ஈஸன் என்ஜினீயரிங் கம்பெனி.

ஆரம்பித்த உற்சாகம் சிறிதும் குன்றாது புதுக் கம்பெனி சுறுசுறுப்புடன் செயல்பட்டது. ஒன்றிலிருந்து ஒன்றாக அபிவிருத்தி காணத் தலைப்பட்டது. ஒரு கம்பெனி இரண்டாகி, பிறகு மூன்றாகி — இப்போது



1. ஈசன் என்ஜினீயரிங் கம்பெனியின் தொழிற்சாலைக்கு 1960ம் ஆண்டில் ராஜாஜி விஜயம் செய்தார். ராஜாஜி அவர்களுக்குத் திரு கே. ஈசுவரன் தொழிற்சாலை பற்றி விளக்கங்கள் கொடுக்கிறார். □



2. ஈசன் என்ஜினீயரிங் தொழிற்சாலையின் மற்றொரு பகுதியில் ராஜாஜி. பின்னால் நிற்கின்றனர் திரு சதாசிவமும், திரு கே. ஆர். சுந்தரமய்யரும், திரு ஆர். அனந்த நாராயணனும். □

ஐந்து தனித் தனி கம்பெனிகள் தனித் தனி பிரிவுகளை மேற்கொண்டு சீரும் சிறப்புமாக நடைபெற்றுக் கொண்டு வருகின்றன. எல்லாமே மின்சார விநியோகத்துக்குச் சம்பந்தப்பட்டவை. எல்லாம் இணைந்து, ''ஈசன் குரூப்'' கம்பெனிகள் என்று இயங்குகின்றன. இதன் தலைவர்தாம், 1925-40ஆம் ஆண்டுகளில் சைக்கிள் விநியோகம் செய்து வந்த திரு கே. ஈசுவரன். இன்று சென்னைத் தொழிலதிபர்களில் ஒரு முக்கியஸ்தர்; முன்னணியில் வீற்றிருக்கும் அந்தஸ்து உள்ளவர்.

அவருடைய ஈசன் என்ஜினீயரிங் கம்பெனியின் ஆரம்பம் எப்படிச் சுவையானதோ, அப்படியே அவருடைய தொழிலின் வளர்ச்சியும். 1956ஆம் ஆண்டில் பிரபல ஆங்கிலேய கம்பெனியான ''ஹாக் பிரிட்ஜ் அண்டு ஹெவைட்டிக் எலெக்ட்ரிக் கம்பெனி'' யின் கூட்டுறவுடன் சக்தி வாய்ந்த மின் – மாற்று உபகரணங்களைச் சென்னையிலே உற்பத்தி செய்யத் தொடங்கினார். எங்கேயோ ஆற்று நீரை அணை போட்டு மின் நிலையங்களில் உற்பத்தி செய்யப்படும், தொழில் வளர்ச்சிக்கு ஆதார சக்தியான மின்சாரத்தை நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் சின்னஞ் சிறு கிராமங்களிலும், நகரங்களிலும் சிறு தொழில்களுக்கும் பெரிய தொழில்களுக்கும் எடுத்துச் சென்று, அவரவர்களுக்குள்ள தேவைப்படி வேகத்தையும், அளவையும் குறைத்து உபயோகிக்கக்கூடிய விதத்தில் அளிப்பதற்கு இன்றியமையாத உபகரணங்கள் Transformers என்னும் 'மின் மாற்றிகள்'. இதைத் தயாரிப்பதில் இங்கிலாந்திலேயே புகழ்பெற்றவர்கள் ஹாக் பிரிட்ஜ் கம்பெனியார். 1946ம் ஆண்டிலிருந்து இக் கம்பெனியின் தயாரிப்புகளை நமது நாட்டில் விநியோகித்து அனுபவம் உள்ளவராதலால், சென்னையிலே உற்பத்தியைத் தொடங்குவது திரு ஈசுவரனுக்குச் சுலபமாகவே இருந்தது. உயர் சக்தி வாய்ந்த 400 KV இனங்களும், 100 KV, 220 KV இனங்களும் H.H.E. என்ற முத்திரையுடன் இப்போதெல்லாம் பாரதத்திலுள்ள எல்லா மாநிலங்களுக்கும் விநியோகமாகிக் கொண்டிருக்கின்றன. காஷ்மீரத்திலிருந்து கன்யாகுமரி வரையிலும் மின்சார விநியோகத்தை ஒன்றாக இணைக்கும் பணியில் திரு ஈசுவரன் உற்பத்தி செய்தளித்துள்ள சுமார் 22,000 உபகரணங்கள் பயனளித்து வருகின்றன என்பதைக் கேட்டால் தமிழகத்துக்குத் திரு ஈசுவரன் அளித்து வரும் பெருமை விளங்கும்.

ஈசன் கம்பெனிகளின் பிரமிப்பூட்டும் மற்றொரு தயாரிப்பு ''ஸ்விச் கீர்'' என்னும் மற்றொரு உபகரணம். இங்கிலாந்தில் உள்ள ஆட்டர் மில் ஸ்விச்கீர் லிமிடெட் கம்பெனியின் கூட்டுறவுடன் இயங்கும் ''ஈசன் அண்டு ஸன்ஸ் என்ஜினீர்ஸ்'' கம்பெனி, நம் நாட்டிலேயே மிகப் பெரிய அளவுள்ள, முப்பத்தைந்து பகுதிகள் கொண்ட ஆட்டர் மில் ஸ்விச் கீர் சாதனத்தைத் தயாரித்து ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள ஒரு சர்க்கரை ஆலைக்குக் கொடுத்துள்ளது. இது ஒரு பிரமிப்பூட்டும் சாதனை என்றால் மிகையாகாது.

1963ஆம் ஆண்டில் மேலும் ஒரு நிறுவனம் தோன்றிற்று. இங்கே மின்சாரத் துறையைத் தவிர மற்ற என்ஜினீயரிங் சம்பந்தமான பல பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. தொழில் பட்டறைகளில் தேவைப்படும் இரும்பு, அலுமினியம், எவர்சில்வர் முதலியவற்றாலான பொருள்களைத் தயாரித்தளிப்பதுடன், கடசல் பிடித்தல் போன்ற நகாசு வேலைகளும் இங்கே மேற்கொள்ளப்படுகின்றன. சென்னை, எண்ணெய் சுத்திகரிப்புச் சாலைக்கு, ஆங்கிலேய கம்பெனிகள் கொடுத்த நகலுக்கும் வரையறைகளுக்கும் இணங்கப் பல இரும்பு எஃகு எண்ணெய்க் குழாய்களும், சென்னை துறைமுகத்துக்குச் சில நுட்பம் மிகுந்த உபகரணங்களும் உற்பத்தி செய்தளித்த பெருமை ஈசன் என்ஜினீயரிங் கம்பெனிக்கு உண்டு.

சமீப காலத்தில் தோன்றியுள்ள மற்றொரு நிறுவனத்தில் வார்ப்படங்கள் தயாராகின்றன. மின்சார சம்பந்தமான எந்த வேலையானாலும், விநியோகம், ஸ்தலத்தில் அமைத்தல், இயக்குதல், மேற் பார்வை, கண்காணிப்பு முதலிய சகல பொறுப்புக்களையும் ஏற்று, மேற்கொண்ட பணியை உத்தரவாதத்துடன் திருப்திகரமாக நிறைவேற்றிக் கொடுப்பதில் ஈசன் குரூப் கம்பெனிகள் தனிப் பெருமையுடன் விளங்குகின்றன.

சென்னைச் சுற்றுப்புறங்கள் எல்லாம், தொழில் நிறுவனங்கள் மலிந்து காட்சியளிப்பதைக் கண்டால் தொழில் முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட எவருடைய உள்ளமும் மகிழும். இத்தகைய நிறுவனங்களில் ஈசன் என்ஜினீயரிங் கம்பெனிகளின் தொழிற்சாலைகள் முக்கிய இடம் பெறுகின்றன. மேற்கு வங்காளம், பீஹார், குஜராத், சென்னை, ஆந்திரப் பிரதேசம் போன்ற ராஜ்ய மின்சார வாரியங்களுக்கெல்லாம் ஈசன் என்ஜினீயரிங் கம்பெனியின் உற்பத்திப் பொருள்கள் பெருவாரியாக விநியோகமாகி இருக்கின்றன. நாட்டில் மொத்த மின் மாற்றுக் கருவி (Transformer) உற்பத்தியில் ஈசன் குரூப் கம்பெனிகள் மட்டும் 17-18 சதம், அதாவது ஆறில் ஒரு பாகத்தை உற்பத்தி செய்கின்றன. தொழிற்சாலைகளின் அளவைக் கொண்டு பார்த்தால், போபால் சர்க்கார் நிறுவனத்துக்கு அடுத்தபடியாக ஈசன் என்ஜினீயரிங் கம்பெனியைச் சொல்லலாம்.

இவ்வளவு அநுபவமும், தொழில் திறமையும் உள்ள திரு கே. ஈசுவரன் நமது திறமையை வெளி நாட்டவர்கள் போற்ற வேண்டும், நமது உற்பத்திகளை அயல் நாட்டுச் சந்தைகளில் விற்பனை செய்ய வேண்டும் என்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டவர். இதில் வெற்றியும் கண்டிருக்கிறார் ஈசுவரன். குவெய்ட், மலேஷியா, ஸுடான் போன்ற நாடுகளில் மிகக் கடுமையான போட்டிகளுக்கிடையில் உயர்ந்த மதிப்புள்ள பல ஆர்டர்களை திரு ஈசுவரன் தட்டிக் கொண்டு வந்திருக்கிறார். குவெய்ட்டில் மட்டும் சுமார் இரண்டு கோடி மதிப்புள்ள ஆர்டரைப் பெற்றிருக்கிறார் என்றால் திரு ஈசுவரனின் செயல் திறனை மெச்சாமலிருக்க முடியாது. தென் ஆப்பிரிக்காவில் உள்ள டான்ஜானிய நாட்டில் சமீபத்தில் ஓர் ஆர்டர் இவருடைய கம்பெனிக்குக் கிடைத்திருக்கிறது. இதைப் பற்றிக் கூறும் போது, அவர் வியாபாரத் தந்திரத்தை வெளிப்படையாகவே சொல்லுகிறார். முதல் இரண்டு போட்டிகளில் விட்டுக் கொடுக்கத்தான் வேண்டும். லாபம் கிடைக்காது. ஆனால் நம்பிக்கை ஏற்பட்டு விட்டால், மூன்றாவது போட்டியிலிருந்து லாபகரமாகவே அயல் நாடுகளில் வியாபாரம் செய்ய முடியும் என்கிறார் திரு ஈசுவரன். ஆனால் — இது மிகவும் முக்கியமானது — உற்பத்திப் பொருளின் தரம், சந்தேகமின்றி முதல்தரமாக இருத்தல் மிக அவசியம். நமது நாட்டில், நமது சென்னை மாநிலத் தொழிலாளர்கள், பொறியாளர்கள், செயலாளர்களின் திறமை அபாரம் என்கிறார் திரு ஈசுவரன். என்ன தன்னம்பிக்கை பாருங்கள். ஆனால் இது வெறும் பேச்சுக்காக வழங்கப்படும் சான்றிதழ் அல்ல. அநுபவ வாயிலாக உள்ளம் பூரித்து வரும் பாராட்டு.

பரம்பரைத் தொழிலதிபர்கள் வர்க்கத்தைச் சேர்ந்தவரல்ல திரு ஈசுவரன். தாமாக உழைத்துத் தொழிலைச் சிறிய அளவில் அமைத்து, அல்லும் பகலும் அதை வளர்த்துப் பெரிய நிறுவனம் என்ற நிலைக்கு அதைப் படிப்படியாக உயர்த்திய பெருமை ஈசுவரனுக்கு உண்டு. வெற்றித் தொழில் வீரர்கள் என்று தமிழகத் தொழிலதிபர்களைப் பற்றிய வரலாறு எழுதப்பட்டால், ஈசுவரன் அந்தப் பட்டியலில் நிச்சயம் இடம் பெறுவார்.

அநுபவம் மூலம் முன்னுக்கு வந்தவராதலால் தொழில் சம்பந்தமாகப் பல உருப்படியான கருத்துக்கள் திரு ஈசுவரனுக்கு உண்டு. அவற்றை அவர் எடுத்துச் சொல்வதும் ஆணித்தரமாக இருக்கும். உதாரணத்துக்குச் சில:

'வெளி நாடுகளில் ஆர்டர் பிடிப்பது பெரிய காரியமல்ல. விடாமுயற்சியுடன் பிடிவாதமாகச் செயலாற்றுவதும் சர்வதேச தர நிர்ணயங்களுக்குச் சிறிதும் வழுவாத நமது உற்பத்திப் பொருள்களின் தர உயர்வால் அயல்நாடுகளில் மதிப்புப் பெறுவதும் அந்த அடிப்படையில் நமது பொருள்களை விற்பனை செய்வதும்தான் போற்றப்பட வேண்டும்' என்கிறார். மறுத்துச் சொல்ல முடியுமா?

தொழில் மந்தம், தொழில் மந்தம் என்பதைக் கேட்டு மிரள வேண்டும். தொழில் மந்தம் எதனால் ஏற்படுகிறது? காரணம் என்ன? அவருடைய துறையையே எடுத்துக் கொண்டால் 'டிரான்ஸ்பார்மர்' உற்பத்தி நாட்டின் தேவையைவிட அதிகம். எவ்வளவு அதிகம்? இரு மடங்கு என்கிறார். அதாவது இப்போது உள்ள தொழிற்சாலைகளில் பாதி அளவு செவ்வையாக இயங்கினாலே நாட்டின் தேவை முழுவதையும் பூர்த்தி செய்து விடலாம் என்று எண்ணுகிறார் திரு ஈசுவரன். திட்டக் கமிஷனின் போக்கு பிரத்தியட்ச நோக்கில் அமையாததற்கு நறுக்காக ஒரு சாட்டை!

இப்படி எத்தனையோ! இவ்வளவு அநுபவமும், சிந்தனைகளும், உருப்படியான கருத்துக்களும் இப்போது சென்னையில் உள்ள ஹிந்துஸ்தான் வர்த்தக சங்கத்துக்குப் பயன்படப் போகின்றன. இச்சங்கத்தின் 1969–70 நடப்பு ஆண்டுக்குத் தலைவராக திரு கே. ஈசுவரன் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார் என்ற மகிழ்ச்சிகரமான செய்தி அண்மையில் வெளியாயிற்று. அவரைத் தேர்ந்தெடுத்ததற்கு ஹிந்துஸ்தான் வர்த்தக சங்கத்தைப் பாராட்டுகிறோம்.

தொழில் துறையில் எப்படி உயர்ந்தவரோ, தம் உருவத்தால் எப்படி உயர்ந்தவரோ — அவருடைய உயரம் ஆறு அடி — அப்படியே மனிதப் பண்பிலும் உயர்ந்தவர் திரு ஈசுவரன். நட்பை போஷித்து வளர்ப்பவர். அவருடைய உருவத்தை இவ்விதழ் அட்டையில் பிரசுரிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம். அவருடைய பதவி காலத்தில் ஹிந்துஸ்தான் வர்த்தக சபையின் பணி உயர்வதாக!

— எம். எஸ். சிவஸ்வாமி

# கொடுக்கக் காத்திருக்கும் கொடுதலை

சென்னை நகரில் உள்ள வீடுகளில் குழாயைத் திறந்தால் தண்ணீர் கொட்டும்! இன்று சொட்டுகிற குழாய்களில் தூய குடிநீர் கொட்டும்! பகற்கனவு அல்ல; இதற்குக் காவிரியிலிருந்தோ கங்கையிலிருந்தோ நீரைக் கொணர வேண்டியதில்லை. சென்னை நகரின் அருகில் உள்ள கொடுதலை ஆறு, நகரவாசிகளுக்கு வேண்டியமட்டும் நீரைக் கொடுக்கக் காத்திருக்கிறது. நாம் கூறவில்லை. பிரெஞ்சு நிபுணர் பால் கிளாஸ் அறுதியிட்டுக் கூறுகிறார். அவரது திட்டந்தான் என்ன?

கொடுதலை ஆற்றிலே சுமார் 40 அடி முதல் 55 அடி வரை ஆழம் உள்ள கிணறு இறக்க வேண்டும். இக்கிணறு சிமெண்டு காங்கிரீட்டினால் ஆனது. பக்கங்களிலிருந்து நீர் கசியாது. கிணற்றின் அடிப் பாகத்தின் வழியாகவும் நீர் உள்ளே வரக் கூடாது. அடிப் பாகத்தையும்




சிமெண்டு காங்கிரீட் கொண்டு முழுதும் அடைத்து விட வேண்டும். இது ஒரு பிரும்மாண்டமான சிமெண்ட் கான்க்ரீட் தொட்டி என்றே கூறலாம். ஆற்றில் மிகுதியாக வெள்ளம் வரும்போது நீரின் மட்டம் எந்த அளவுக்கு இருக்குமோ அதைவிட உயரத்தில் காங்கிரீட் கிணற்றின் மேல் பாகம் இருக்கும். இம்மாதிரிக் கிணற்றுக்கு கெய்ஸ்ஸான் (Caisson) கிணறு என்று பெயர். கிணற்றுக்குள் நீர் எப்படி வரும் என்று கேட்கிறீர்களா? இத்தகைய கிணற்றில் வற்றாது நீர் இருக்கும்படியான திட்டத்தினை உருவாக்கியவர் ரானே என்ற அமெரிக்கர். இம்முறையினைப் பயன்படுத்தியே ரூ. 45 லட்சம் செலவில் கிணறு அமைத்து, பரோடாவிலுள்ள எண்ணெய் சுத்திகரிப்பு நிலையங்களுக்குத் தேவையான நீரை வழங்கினார் பிரெஞ்சு நிபுணர் பால் கிளாஸ். தேவைக்கு அதிகமான நீரைச் சுத்திகரிப்பு ஆலையினர் பரோடா நகரசபைக்கு வழங்கினர்!

காங்கிரீட் கிணற்றின் பக்கவாட்டில் பெரிய அளவில் எட்டு அல்லது ஒன்பது துவாரங்கள் இருக்கும். கிணற்றினைப் பூமிக்குள் இறக்கு முன் இத்துவாரங்களை இலேசாக சிமெண்ட் பூசி அடைக்க வேண்டும். இதைத் தட்டி உடைத்துக் கொண்டு துவாரங்களுக்குள் நுழையும்படி கிணற்றின் பக்கவாட்டில் சுமார் 100 அடி நீளமுள்ள இரும்புக் குழாய்களை ஹைட்ராலிக் ஜாக் உபயோகித்துப் பொருத்த வேண்டும். கிணற்றின் பக்கவாட்டில் பொருத்தப்படும் குழாய்களில் முழு நீளத்துக்கும் சிறு சிறு துவாரங்கள் இருக்கும். இக் குழாய் கிணற்றுக்குள் நுழையும் இடத்தில் வால்வு (Valve) பொருத்தப்பட்டுள்ளது. இது நீரைக் கிணற்றுக்குள் செலுத்தும். கிணற்றிலிருந்து நீர் வெளியே செல்லாமல் தடுத்துவிடும். ஆற்றின் அடிப் பாகம் கூழாங்கற்களும் பெரு மணலும் (Aquifer) நிரம்பியதாக உள்ளதால் அதனிடையில் நீர் மிகுதியாக உள்ளது. கிணற்றின் பக்கவாட்டில் செருகப்படும் சல்லடைக் குழாய்கள் வழியாகக் கிணற்றுக்குள் நீர் வந்து சேரும். இலேசாக மழை பெய்தாலும் போதும், கிணறு நிரம்பி விடும்.

பஞ்செட்டி, தாமரைப்பாக்கம் இரு இடங்களிலுமிருந்து கிடைக்கும் 15 மிலியன் காலன் தண்ணீரைவிட மிக அதிக அளவில் கொடுதலை ஆற்றிலிருந்து பெற முடியும். இவ்விதம் பெறக்கூடிய நீரின் சிறப்பு என்னவென்றால், அது இயற்கையாகவே மிகத் தூய்மையாக இருக்கும். அதனைச் சுத்தம் செய்வதற்கென்று அதிகமாகச் செலவு செய்யத் தேவையில்லை. இப்போது மாநகராட்சி வழங்கும் குடி தண்ணீரைச் சுத்தம் செய்ய 1000 காலனுக்கு எட்டணா வீதம் செலவு ஆகிறது என்பது நினைவுறத்தக்கது. காவிரி நீரைக் கொணரும் திட்டத்துக்கு ஆகும் செலவினை விட பால்கிளாஸின் திட்டம் செலவு குறைவு, நிரந்தரமாக வற்றாது.

அண்மையில் டெல்லியில் யமுனை நதிக் கரையில் இம்முறையில் அமைக்கப் பெற்ற கிணறு ஒன்று, நாள் ஒன்றுக்கு எட்டு மிலியன் காலன் நீர் வழங்குகிறதாம். கொடுதலை ஆறு அதை விட அதிக நீர் வழங்கும்.

அண்மையில் திரு பால் கிளாஸை பிரானின் சந்தித்துப் பேசிய திரு ராவல் கிருஷ்ணய்யர் அளித்த தகவல்கள். பேட்டி: 'ரா. ப'





# குழந்தைகள் விரும்பும் கூடாரம்

பிரும்மாண்டமான சர்க்கஸ் கூடாரத்தின் முன்னால் ஒரு பக்கம் யானைகளும் யானைக் குட்டிகளும் வரிசையாக நின்றன. யானைப் பசிக்குச் சோளப் பொரி போல் அவ்வப்போது தென்னை மட்டைகள் வந்து விழுந்தன.

"யானையைக் கட்டித் தீனி போடறது பெரும் பாடுதான். போட்ட மட்டைகள் இருந்த இடம் தெரியவில்லையே!" என்றார் பத்திரிகை நிருபர் ஒருவர்.

"அரிசிக்குத்தான் சுவாமி ரேஷன்! தென்னை மட்டைக்கு இன்னும் ரேஷன் வரவில்லை!" என்று பதிலளித்தார் இன்னொருவர்.

"அங்கே பாருங்க, யானைக் குட்டி ஒண்ணு தன் தலையிலே மண்ணை வாரிப் போட்டுக்கிறது!" என்று அதிசயித்தார் ஒரு பிறவிப் பட்டணத்து ஆசாமி.

"பின்னே, தண்ணீரையா தலையிலே சொரிஞ்சுக்க முடியும்? அதுவும் சென்னையில்?"

"இல்லே, ஸார்! 'யானை தன் தலையிலே மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளும்' என்கிற பழமொழி உண்மை என்கிறதைப் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு நிரூபித்துக் காட்டுகிறது சர்க்கஸ் யானை!"

"நம்ம தலையிலே போடாதவரைக்கும் க்ஷேமம்!" என்று ஒதுங்கினார் வயதான பத்திரிகை நிருபர் ஒருவர்.

"மிருகங்களைக் கூண்டிலே அடைச்சு வைத்த மாதிரி பத்திரிகை நிருபர்களான நம்மையும் ஒரு 'பாக்ஸு'க்குள்ளே உட்கார வைச்சிருக்காங்களே, பார்த்தேளா!"

"பத்திரிகைப் புலிகளாச்சே! அதனாலேதான்!"

இந்தச் சமயத்தில் "இவர்தான் சர்க்கஸ் நடத்தும் நிர்வாகி பி. கே. தேவதாஸ்!" என்று ஒருவர் பத்திரிகை நிருபர்களுக்கு அறிமுகப் படுத்தப்பட்டார். உடனே, "ஐயோ பாவம்!" என்று பத்திரிகை நிருபர்கள் ஏகமனதாய் அனுதாபப்பட்டார்கள்! ஒன்றிரண்டு குழந்தைகள் உள்ள சின்னக் குடும்பத்தையே நிர்வகிக்க முடியாத இந்த ரேஷன் காலத்திலே நானூறு ஆட்கள், நூறு மிருகங்கள் அடங்கிய 'சர்க்கஸ் குடும்பத்தை' நிர்வகிக்கும் தலைவரைக் கண்டு வேறு என்ன சொல்லத் தோன்றும்?

"ஒரு பெரிய சர்க்கஸுக்கு நல்ல கூடாரம், மிருகங்களை வைத்திருக்க இடம், தேர்ந்த சர்க்கஸ் கலைஞர்கள், நூற்றுக் கணக்கான பணியாளர்கள் எல்லாம் தேவை. ஒவ்வொரு வருஷமும் கூடாரம் புதிதாக மாற்றும் போது அதுவே லட்ச ரூபாய் விழுங்கி விடுகிறது. நகரத்துக்கு நகரம் மாற்றும் போது பிரயாணச் செலவு முப்பதினாயிரம் போய்விடுகிறது!" என்று சர்க்கஸ் செலவுக் கணக்குகளை அடுக்கினார், மானேஜர் நரேந்திரநாத். 'யானையைக் கட்டித் தீவனம் போடுவது' என்ற பழமொழியை மாற்றி 'சர்க்கஸை நடத்தித் தீவனம் போடுவது' என்று சொல்லத் தோன்றியது.

"இன்னும் கேளுங்கள். எங்களிடம் உள்ள மோட்டார் வண்டிகள் மூன்று மாதங்களில் பலதடவை இரண்டு மூன்று ராஜ்யங்களுக்குப் போக வேண்டி நேருவதால் மோட்டார் வரி பலமுறை வரியாகி எங்களை அழுத்துகிறது!" என்று கூறினார் சர்க்கஸ் அதிபர் தேவராஜ்.

இதுபோன்ற சிரமங்களை மேலும் மேலும் கேட்டபோது சர்க்கஸ் நடத்துவதே ஒரு சர்க்கஸ் வேலைதான் என்று புரிந்தது.

"மற்ற தொழில்களைப் போல் உங்கள் சர்க்கஸில் யூனியன் தலையீடு உண்டா?" என்று பத்திரிகைப் பிரதிநிதி ஒருவர் கேட்டார்.



"நல்ல காலம்! எங்கள் சர்க்கஸில் யூனியன் கிடையாது! சண்டை சச்சரவு கிடையாது. எல்லோரும் ஒரே குடும்பம் போல் சர்க்கஸ் நடக்க ஒத்துழைத்து வருகிறோம். சர்க்கஸ் நன்றாக நடந்தால் தான் எங்கள் வாழ்வு. அது சரியாக இயங்க முழு மூச்சுடன் அனைவரும் தோளோடு தோள் நின்று ஒத்துழைக்கிறோம். சர்க்கஸில், சர்க்கஸுக்காக, சர்க்கஸ் செய்து வாழ்கிறோம். அதிலேயே மடிவோம்!" என்று உணர்ச்சி ததும்பக் கூறினார் நரேந்திர நாத்.

✿ ✿ ✿

சர்க்கஸ் பாண்டு குறித்த நேரத்தில் ஒலிக்கத் தொடங்கியது. அனைவரும் ஆவலுடன் அவரவர் ஆசனத்தில் போய் அமர்ந்து கொண்டனர். குழந்தைகளோடு பெற்றோர் கூடாரம் நிறையக் குழுமியிருந்தார்கள். குழந்தைகளுக்குத்தான் சர்க்கஸ் காணுவதில் எத்தனை ஆனந்தம்! குழந்தைகள் உள்ள வரையில் சர்க்கஸும் சிரஞ்சீவியாக இருக்கும்!

பார் விளையாட்டு வித்பன்னர்களும் வீராங்கனைகளும் ஒரு பாரிலிருந்து மற்றொரு பாருக்குத் தாவி, அந்தரத்தில் குட்டிக்கரணம் போடத் தொடங்குகிறார்கள். 'மனுஷன் குரங்கிலிருந்து வந்தவன்' என்ற டார்வின் கொள்கையில் தப்பித் தவறி யாருக்காவது சந்தேகம் இருந்தால் இதைப் பார்த்ததும் ஓடிப் போய்விடும்!



உடலைப் பல கோணங்களிலும் ஒரு பெண் வளைத்து, நெளித்துக் காட்டுகிறாள். பார்வையாளர்களில் பருத்த உடல் படைத்தவர்கள் பெருமூச்சு விடுகிறார்கள். மூன்று பெண்கள் ஆறடி உயரத்தில் கம்பியில் முன்னும் பின்னும் சைக்கிளை ஓட்டுகிறார்கள். நம் நகரங்களில் அறுபதடி அகலமுள்ள சாலையிலேயே விபத்து நேர்கிறது. ஆனால் இங்கே? மூச்! கரடி உயரமான சைக்கிளில் பவனி வருகிறது. யானை டார் போட்ட மூன்று சக்கர ராட்சத சைக்கிளை ஓட்டுகிறது! குரங்கு சைக்கிள் விடுகிறது! 'இது என்ன பிரமாதம்! விண்கலத்தில் உலகைச் சுற்றி வரக் கூட நாங்கள் அஞ்ச மாட்டோம்' என்று அது வருத்தத்துடன் நெஞ்சை அடைக்கக் கூறுவது போல் நமக்குத் தோன்றுகிறது.

✿ ✿ ✿

"அதோ வாயைப் பிளந்து வருகிறதே; அது என்னை விழுங்கிடும் போலிருக்கே!" என்று ஒரு குழந்தை அலறுகிறது.

நீர் யானை ஒன்று அகலமாக வாயைப் பிளந்து பிளந்து காட்டி வருகிறது. ஒவ்வொரு தடவையும் வாயைப் பிளக்கும்போது,

அதனுடன் நடக்கும் அழகிய நங்கையின் திருக்கரத்திலிருந்து ரொட்டித் துண்டு வாயில் விழுகிறது! ஆயாயிரம் காலன் பிடிக்கும் விசேஷ நீர்த் தொட்டியில் தினம் ஐம்பது கிலோ உருளைக்கிழங்கு விழுங்கும் நீர் யானை ஆப்பிரிக்காவிலிருந்து வந்துள்ள சர்க்கஸ் நட்சத்திரம்!

❁ ❁ ❁

நாற்காலியில் அமர்ந்திருந்த கோமாளி ஒருவர் எழுந்து ஒரு குட்டிக்கரணம் போடுகிறார். மறுபடியும் நாற்காலியில் அமர வரும் போது மற்றொரு கோமாளியினால் நாற்காலி அப்புறப்படுத்தப்பட 'தடால்' என்று கீழே விழுகிறார். கோபமடைந்த அவர் நாற்காலியைத் தூக்கி வீச முற்படுகிறார். அந்தக் கணத்தில் அவருக்கு எதிரே ரசிகர் கூட்டத்தினிடையில் அமர்ந்திருக்கும் ஒரு வாலிபர் பயந்து போய் நிஜமாகவே உருண்டு விழுகிறார்! இயற்கையாக நடந்த இந்தச் சர்க்கஸ் மக்களைப் பெரிதும் குதூகலிக்கச் செய்கிறது!

கோமாளி அந்த வாலிபரிடமே மறுபடியும் வம்பு செய்கிறார். பந்தை அவர் மீது வீசுவது போல் 'பாச்சா' காட்டுகிறார். வாலிபர் கோபித்துக் கொண்டு எழுந்து போய் விடுகிறார்.

"அந்த வாலிபரும் சர்க்கஸ் குழுவைச் சேர்ந்தவர்தானோ என்னவோ?"

"ஏன்? எதனால் சொல்கிறீர்கள்?"

"கொடுத்த காசுக்கு முழு சர்க்கஸையும் பார்க்காமல் பாதியில் எழுந்து செல்ல மனம் வருமோ?"

❁ ❁ ❁

பயில்வான் ஒருவர் கனத்த பளுவைத் தூக்குகிறார். குட்டி யானையைத் தம் உடல் மீது நடக்க வைக்கிறார். நாற்பது அடி தூரத்தைத் தாண்ட ஒரு பெண் 'ஜீப்'பைப் பயன்படுத்துகிறாள். ஒற்றைச் சக்கரச் சைக்கிளில் அமர்ந்தபடியே ஹாக்கி மட்டையுடன் கால் பந்தை வெளுத்து வாங்குகிறார்கள் பெண்கள். அசட்டுப் பிசட்டு என்று இருக்கும் சென்ற நூற்றாண்டு ஹாஸ்ய நிகழ்ச்சியும் சர்க்கஸில் இடம் பெறுகிறது.

கூண்டில் வரிசையாக நிற்கும் சிங்கங்களின் மீது ஒரு வனிதை படுத்திருக்கிறாள். இதைப் பார்த்ததும் ஒரு சந்தேகம் எழுகிறது:

"அவளைக் கடித்து விழுங்காமல் இத்தனை சமர்த்தாக அந்தச் சிங்கங்கள் உள்ளனவே, ஒருவேளை சர்க்கஸில் சிங்கங்களுக்குச் சைவ உணவே போட்டுப் பழக்கி விட்டிருக்கிறார்களோ?"

"சேச்சே! அவை அசையாமல் இருப்பதிலிருந்தே அசைவ உணவுதான் என்று தெரியவில்லையா?"

பல பிரச்னைகளுக்கு மத்தியில் சர்க்கஸ் மக்களை மகிழ்விப்பதில் ஈடுபட்டிருப்பது பாராட்டுக்குரியது. சென்னையில் இப்போது நடக்கும் பிரபாத் சர்க்கஸ் மிகப் பெரிய பன்னிரண்டு சர்க்கஸ்களில் ஒன்று. பிரபாத் சர்க்கஸ் பிரமாத சர்க்கஸ்தான்!

—குண்டுமணி



செட்டிநாட்டரசர் காரியதரிசி ஸ்ரீ வைத்திய சுப்பிரமணிய அய்யர் அவர்களின் புதல்வர் ஜயராமன் பி. எஸ்ஸி., ஏ. ஸி. ஏ.வுக்கும், திரு எஸ். ஜி. சுப்பிரமணியம் அவர்களின் புதல்வி சௌ. லக்ஷ்மிக்கும் ஜூலை 2-ந் தேதி திருநெல்வேலி ஸ்ரீபுரத்தில் அதிவிமரிசையாக விவாகம் நடைபெற்றது. திருமண வைபவத்தை யொட்டி செம்மங்குடி ஸ்ரீ சீனிவாசய்யர் அவர்களின் இன்னிசை விருந்தும், ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரியின் கச்சேரியும் ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகளின் ருக்மிணி கல்யாண ஹரிகதையும் நடைபெற்றன. சென்னையில் நடைபெற்ற வரவேற்பு வைபவத்தில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இசை விருந்து நடந்தது. திருமணத்துக்கும் வரவேற்பு வைபவத்துக்கும் தமிழகத்திலுள்ள பிரமுகர்கள் பலர் விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்தனர். புதுமணம் புரிந்த மணமக்களுக்கு நம் நல்வாழ்த்துக்கள்.



ஸ்ரீ P. B. வெங்கட்ராம அய்யர் அவர்களின் சதாபிஷேகம் பாலக்காடு, குமரபுரத்தில் சமீபத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

சுகத்திலோ சுகவீனத்திலோ
பெண்கள் எப்போதும்
நம்பியிருப்பது

லோத்ரா





ஆரோக்யத்திற்கும்
மகிழ்ச்சிக்கும்
சிறந்த டானிக்

65 ஆண்டுகட்கும் மேலாக
புகழ்பெற்றது

கேஸரி குடீரம் (பி) லிட்.
15, வெஸ்ட்காட் ரோடு
ராயப்பேட்டை, சென்னை-14

தமிழ்நாட்டுக்கு ஏஜண்டுகள்:
**சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்**
மேலக் கோபுரத் தெரு, மதுரை

# உங்களுக்குத் தேவை




பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு - கப்பல் - விபத்து

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
5 கோயமுத்தூர், கொச்சி, கோவில்பட்டி



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பூர்வ கதை

தமிழகத்தின் சரித்திரத்தில் இராஜ ராஜ சோழர் என்று புகழ்பெற்ற அருள்மொழிவர்மர் இளவரசராயிருந்த சமயத்தில் இலங்கையில் சோழ நாட்டுப் படைகளுக்குத் தலைமை வகித்துப் போர் நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தி நோய்வாய்ப்பட்டுத் தஞ்சையில் படுத்த படுக்கையில் இருந்தார். சுந்தர சோழரின் மூத்த குமாரரும் பட்டத்து இளவரசருமான ஆதித்த கரிகாலர் காஞ்சியில் தங்கியிருந்தார். இரண்டு ராஜ குமாரர்களுக்கும் நடுவில் பிறந்தவரான குந்தவை பழையாறை நகரில் செம்பியன் மாதேவியின் ஆதரவில் இருந்து வந்தார்.

சோழ சாம்ராஜ்யத்துப் பெருந்தரத்து அதிகாரிகளிலே மிக முக்கியமானவர்கள் அண்ணன் தம்பிகளான பழுவேட்டரையர்கள். பெரிய பழுவேட்டரையர் ஏறக்குறைய சோழ நாட்டின் சர்வாதிகாரி பதவியை வகித்து வந்தார். சாம்ராஜ்யத்தின் தன பொக்கிஷமும் தானிய பண்டக சாலையும் அவருடைய வசத்தில் இருந்து வந்தன. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் தளபதி பதவியை வகித்து வந்தார். சுந்தர சோழ சக்கரவர்த்தி பெரிதும் இந்த இரு சகோதரர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்து வந்தார்.

பெரிய பழுவேட்டரையர் முதுமைப் பிராயத்தில் நந்தினி என்னும் அழகிய பெண்ணை மணந்தார். நந்தினியும் குந்தவையும் ஒருவரையொருவர் துவேஷித்தனர். ஒருவரையொருவர் அவமானப் படுத்தவும் பழி வாங்கவும் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நந்தினியின் தூண்டுதல் காரணமாகப் பெரிய பழுவேட்டரையர் ஒரு பெரிய சதியில் ஈடுபட்டார். சுந்தர சோழரின் இரு புதல்வர்களுக்கும் பட்டமில்லாமல் செய்து விட்டு, அவருடைய பெரிய தந்தை மகன் மதுராந்தகனைச் சிம்மாசனத்தில் ஏற்றத் தீர்மானித்தார். இதற்குக் கடம்பூர் சம்புவரையர் முதலிய சிற்றரசர்களின் பூரண சம்மதத்தையும் பெற்றார். காஞ்சியிலிருந்த ஆதித்த கரிகாலர் தம் தந்தையைத் தஞ்சையிலிருந்து காஞ்சிக்கு வரும்படி செய்வதற்காகக் காஞ்சியில் ஒரு பொன் மாளிகை கட்டினார். அதை வந்து பார்க்கும்படி தந்தையை வேண்டிக் கொண்டு தஞ்சைக்கு ஓலை கொடுத்து அனுப்பினார். ஓலையை எடுத்துச் சென்றவன் வந்தியத்தேவன் என்னும் பழைய வாணர் குலத்து வீரன். அவன் வழியில் சம்புவரையர் மாளிகையில் தங்கியிருந்தபோது மேற்படி சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்டான். தஞ்சை சென்று சுந்தர சோழரிடம் ஓலையைக் கொடுத்த பிறகு பழையாறைக்குப் போய்க் குந்தவை தேவியைக் கண்டான். அவளிடம் தான் அறிந்ததையெல்லாம் சொன்னான். குந்தவை அவனை இலங்கை சென்று தன் அருமைச் சகோதரனை அழைத்து வரும்படி ஏவினாள். வழியில் பல அபாயங்களுக்குத் தப்பி வந்தியத்தேவன் இலங்கை வந்து அருள்மொழிவர்மரிடம் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான். அதே சமயத்தில் இளவரசரைத் தேடிக் கொண்டு இன்னும் சிலரும் வந்து சேர்ந்தார்கள். முதன்மந்திரி அநிருத்தர் ஆழ்வார்க்கடியானிடம் இளவரசர் இலங்கையிலேயே இருத்தல் நலம் என்று சொல்லி அனுப்பினார். தம்பியைக் கையோடு காஞ்சிக்கு அழைத்து வரும்படி ஆதித்த கரிகாலர் பார்த்திபேந்திரனை அனுப்பியிருந்தார். சோழ குலத்தை அடியோடு கருவறுக்கச் சபதம் செய்திருந்த கொலைகாரர் கூட்டத்தைச் சேர்ந்த இருவரும் இலங்கைக்கு வந்திருந்தார்கள்.

அருள்மொழிவர்மர் இலங்கைக்கு வந்த புதிதில் அவர் தண்டு இறங்கியிருந்த இடத்தை ஊமைஸ்திரீ ஒருத்தி சுற்றிச் சுற்றி வந்து ஓலமிட்டாள். இளவரசர் அவள் அருகில் சென்று பார்த்தபோது குழந்தைப் பிராயத்தில் தன்னைக் காவேரி நதியில் மூழ்கிப் போகவிடாமல் காப்பாற்றியவள் அவள் தான் என்று அறிந்தார். இளவரசர் தங்கியிருந்த இடம் கொடிய நச்சு அரவம் பரவியிருந்த இடம் என்பதை அம்மாதரசி உணர்த்தி அங்கிருந்து போய் விடும்படி எச்சரித்தாள்.

அநுராதபுரத்தின் வீதிகளில் அருள்மொழிவர்மரும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் மகாபோதி விஹாரத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த போது அவர்கள் மீது ஒரு பழைய மாளிகையின் முகப்பு இடிந்து விழுவதற்கிருந்தது. அந்தச் சமயத்தில் மேற்கூறிய மூதாட்டி தோன்றிக் கைதட்டி அழைத்து அவர்களைக் காப்பாற்றினாள்.

மூவரும் இளவரசர் வழக்கமாகத் தங்கிய விடுதிக்குச் சென்று படுத்துக் கொண்டார்கள். ஆனால் ஒருவருக்கும் தூக்கம் வரவில்லை. இளவரசர் இலங்கையில் அம்மூதாட்டியைத் தாம் சந்தித்த வரலாற்றை அவர்களுக்குக் கூறினார்.



முப்பத்தெட்டாம் அத்தியாயம்

# சித்திரங்கள் பேசின!

இளவரசர் சட்டென்று கதையை நிறுத்தி விட்டு, "உங்களுக்கு ஏதாவது காலடிச் சத்தம் காதில் விழுந்ததா?" என்று கேட்டார்.

கதையில் முழு கவனம் செலுத்தியிருந்த தோழர்கள் இருவரும் தங்களுக்கு ஒன்றும் கேட்கவில்லை என்றார்கள்.

ஆழ்வார்க்கடியான் சற்று நிதானித்து விட்டு, "நாம் உட்கார்ந்திருக்குமிடம் வந்து விட்டது. அம்மம்மா! அந்தக் காய்ச்சல் மிகப் பொல்லாதது. எப்பேர்ப்பட்ட வீரனையும் கோழையாக்கி விடும். உடம்பெல்லாம் போரில் காயம் பட்டும் கலங்காதவர்கள் மூன்று நாள் காய்ச்சலில் மனம் தளர்ந்து 'ஊருக்குப் போக வேண்டும்' என்று சொல்ல ஆரம்பித்து விடுவார்கள். சோழர்களின் குல தெய்வமான துர்க்கா





முன்னைவிட இப்போது உஷ்ணமாயிருக்கிறதே!" என்றான்.

"ஏதோ புகைநாற்றம்கூட வருகிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! இந்த இடத்தில் அபாயம் ஒன்றுமில்லையே?" என்று ஆழ்வார்க்கடியான் கவலையுடன் கேட்டான்.

"அபாயம் ஏதாவது இருந்தால் காவேரி அம்மன் கட்டாயம் வந்து எச்சரிப்பாள். கவலை வேண்டாம்!" என்று இளவரசர் கூறி மேலும் தொடர்ந்து சொன்னார்: —

"அந்த இடத்தை விட்டு உடனே தாவடியைக் கிளப்பிக் கொண்டு புறப்பட்டோம். அப்படியும் நமது வீரர்களில் பத்துப் பேருக்குக் குளிர் காய்ச்சல் பரமேசுவரிதான் அந்த ஊமை ஸ்திரீயின் உருவத்தில் வந்து எங்களை அங்கிருந்து புறப்படச் செய்தார் என்று கருதினேன். அதற்குப் பிறகும் தேவி என்னைக் கைவிட்டு விடவில்லை. நான் போகுமிடங்களுக்கெல்லாம் அவளும் தொடர்ந்து வந்து கொண்டிருந்தாள். வன விலங்குகள், மலைப் பாம்புகள், மறைந்திருந்த எதிரிகள் — இத்தகைய பல ஆபத்துக்களிலிருந்து என்னைக் காப்பாற்றினாள். திடீரென்று எப்படித் தோன்றுவாளோ, அப்படியே மறைந்தும் விடுவாள். சில நாளைக்குள் அந்தத் தேவியுடன் முக பாவத்தினாலும் சைகைகளினாலும் பேசும் சக்தியை நான் பெற்று விட்டேன். பெரும்



பாலும் அவள் உள்ளத்தில் நினைப்பதை என் நெஞ்சம் தெரிந்து கொண்டு விடும். அது மட்டுமல்ல; அம்மாதரசியைக் கண்ணால் பார்க்காமலேயே அவள் பக்கத்தில் எங்கேயோ இருக்கிறாள் என்பதை நான் அறிந்து கொள்வேன். இப்போதுகூட... நல்லது; நீங்கள் உடனே சென்று உங்கள் படுக்கையில் படுத்துக் கொள்ளுங்கள். தூக்கம் வராவிட்டாலும் தூங்குவது போல் இருங்கள்! சீக்கிரம்!'' என்றார் இளவரசர்.

அவ்விதமே இருவரும் சென்று படுத்துக் கொண்டார்கள். கண்களை மூடிக் கொள்ளவும் முயன்றார்கள். ஆனால் அவர்களை மீறிய ஆவலினால் கண்ணிமைகள் மூடிக்கொள்ள மறுத்தன.

**பா**ர்த்துக் கொண்டிருக்கும் போதே நிலா வெளிச்சம் வந்த பலகணியின் அருகில் ஓர் உருவம் வந்து நின்றது. வீதியில் இடிந்து விழுந்த மாளிகைக்கு எதிரில் பார்த்த அதே ஸ்திரீயின் உருவந்தான். மிக மெல்லிய 'உஸ்' என்ற சத்தம் அங்கிருந்து வந்தது. அருள்மொழிவர்மர் எழுந்து பலகணி ஓரமாகச் சென்றார். வெளியில் நின்ற உருவம் ஏதோ சமிக்ஞை செய்தது. இளவரசர் அந்த அறையில் படுத்திருந்த தம் தோழர்களைச் சுட்டிக் காட்டினார். சமிக்ஞை பாஷையில் அதற்கும் ஏதோ மறுமொழி கிடைத்தது.

உடனே அருள்மொழிவர்மர் தோழர்கள் இருவரையும் தம்மைத் தொடர்ந்து வரும்படி சொல்லிவிட்டு அம்மாளிகையிலிருந்து வெளியேறினார். அந்த மூதாட்டி சென்ற வழியில் மூவரும் மௌனமாக நடந்தார்கள். இருபுறமும் மரங்கள் அடர்ந்து இருள் சூழ்ந்திருந்த பாதையில் அவர்கள் வெகுதூரம் சென்ற பிறகு திடீரென்று நிலா வெளிச்சத்தில் ஓர் அதிசயமான காட்சியைக் கண்டார்கள். கரிய பெரிய யானைகள் பல வரிசையாக நின்று, பிரம்மாண்டமான ஸ்தூபம் ஒன்றைக் காவல் புரிந்து கொண்டிருந்தன. அதைப்

பார்த்ததும் வந்தியத்தேவனுடைய மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. அந்த மூதாட்டியோ சிறிதும் தயங்காமல் யானைக் கூட்டத்தை நோக்கி நடந்தாள். ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவன் காதோடு, "அந்த யானைச் சிலைகள் எவ்வளவு தத்ரூபமாக இருக்கின்றன பார்த்தாயா?" என்று சொன்ன பிறகுதான் வந்தியத்தேவனுடைய திகைப்பு நீங்கியது. ஆயினும் அவ னுடைய வியப்பு நீங்கியபாடில்லை.

ஒன்றோடொன்று நெருக்கி இடித்துக் கொண்டு நின்று, அந்த மலை போன்ற ஸ்தூபத்தைத் தாங்கிக் கொண்டிருப் பது போல் அமைக்கப்பட்டிருந்த யானைச் சிலை ஒவ்வொன்றுக்கும் இரண்டு நீண்ட தந்தங்கள் இருந்தன. அவ் விதம் வரிசையாக நின்ற நூற்றுக் கணக்கான யானைகளில் ஒன்றே ஒன் றுக்கு மட்டும் ஒரு தந்தம் ஒடிந்து போயிருந்தது. அந்த யானை அருகில் அவள் சென்றாள். அதன் காலடியில் கிடந்த பெரிய கருங்கல் ஒன்றை அகற்றினாள். அகற்றிய இடத்தில் ஒரு படிக்கட்டு காணப்பட்டது. அதன் வழியாக அவள் இறங்கிச் செல்ல, மற்றவர்களும் பின்தொடர்ந்தார்கள். படிக்கட்டில் இறங்கிச் சிறிது தூரம் குறுகலான வழியில் சென்றதும் ஒரு மண்டபம் காணப்பட்டது. அதில் இரண்டு பெரிய அகல் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

விளக்குகளில் ஒன்றைத் தூண்டி விட்டு அந்த மூதாட்டி கையில் எடுத்துக் கொண்டாள். இளவரசரை மட்டும் தன்னுடன் வரும்படி சமிக்ஞையினால் தெரிவித்தாள். மற்ற இருவரும் இதைப் பற்றி முதலில் சிறிது கவலை கொண் டார்கள். ஆனால் அந்த மூதாட்டி விளக்கைத் தூக்கிப் பிடித்து அந்த மண்டபச் சுவர்களில் உள்ள சித்திரங் களைத்தான் இளவரசருக்குக் காட்டு கிறாள் என்று தெரிந்ததும் அவர் களுடைய கவலை ஓரளவு நீங்கியது.

* * *

இளவரசர் அம்மண்டபச் சுவரில் பார்த்த சித்திரங்கள் ஏதோ ஒரு கதை யில் நிகழ்ந்த சம்பவங்களை வரிசைக் கிரமமாகக் கூறும் தொடர் சித்திரங் களாகத் தோன்றின. புத்த பகவானின் பூர்வ அவதாரக் கதைகளைப் புத்த விஹாரங்களில் சித்திரித்திருக்கும் முறைப்படி இச்சித்திரங்களும் அமைந் திருந்தன. ஆனால் இவை புத்தரின் அவதார நிகழ்ச்சிகளைக் குறிப்பிட வில்லை. ஒரு மானிடப் பெண்ணின் கதையையே சித்திரித்திருந்தது. அந்தச் சித்திரப் பெண்ணின் முகத் தோற்றம் ஏறக்குறைய இப்போது விளக்குப் பிடித் துக் காட்டிய மூதாட்டியின் முகத்தை ஒத்திருந்தது. ஆகவே இந்த ஊமை ஸ்திரீ தன்னுடைய வரலாற்றையே சித்திரங்களாக எழுதியிருக்கிறாள் என்று இளவரசர் இலகுவாகத் தெரிந்து கொண்டார்.

அவற்றில் முதல் சித்திரம் கடல் சூழ்ந்த தீவில் ஓர் இளம் பெண் தன்னந் தனியாக நிற்பதையும் அவளுடைய தகப்பனார் கட்டு மரம் ஏறி மீன் பிடித்துக் கொண்டு வருவதையும் காட்டியது. பின்னர், அந்தப் பெண் காட்டு வழியே சென்றாள். ஒரு மரத் தின் கிளை மீது ஓர் இளைஞன் உட்கார்ந் திருந்தான். அவன் இராஜ குமாரனைப் போலிருந்தான். அந்த மரத்தின் மீது ஒரு கரடி ஏறிக் கொண்டிருந்தது. இராஜ குமாரன் அதைக் கவனியாமல் வேறு திசையில் பார்த்துக் கொண் டிருந்தான். அந்தப் பெண் கூச்சலிட்டு விட்டு ஓடினாள். கரடி அப்பெண்ணைத் துரத்தியது. மரத்தின் மேலிருந்த இளைஞன் குதித்து வந்து கரடியின் மேல் வேலை எறிந்தான். கரடிக்கும் அவனுக்கும் துவந்த யுத்தம் நடந்தது. அந்தப் பெண் தென்னை மரம் ஒன்றின் மீது சாய்ந்து கொண்டு கரடிக்கும் இளைஞனுக்கும் நடந்த சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசி யில் கரடி இறந்து விழுந்தது. இளைஞன் அந்தப் பெண்ணை நெருங்கி வந்தான். அவளுக்குத் தன் நன்றியைத் தெரி வித்தான். ஆனால் அவள் மறுமொழி சொல்லாமல் கண்ணீர் விட்டாள். பிறகு அவள் ஓடிப் போய்த் தன் தந்தையை அழைத்து வந்தாள். வந்த வயோதிகன் தன் பெண் பேச முடியாத ஊமை என்பதைத் தெரிவித்தான். இராஜ குமாரன் முதலில் வருத்தப்பட் டான். பிறகு வருத்தம் நீங்கி அவ ளுடன் சிநேகம் செய்து கொண்டான். காட்டு மலர்களைக் கொய்து மாலை தொடுத்து அவள் கழுத்தில் போட் டான். இருவரும் கைகோத்துக் கொண்டு காட்டில் திரிந்தார்கள்.

ஒரு நாள் பெரிய மரக்கலம் ஒன்று அந்தத் தீவின் சமீபம் வந்தது. அதி லிருந்து சில வீரர்கள் இறங்கி வந் தார்கள். இராஜ குமாரனைக் கண்டு பிடித்து அவனுக்கு வணக்கம் செலுத்தி னார்கள். அவனை மரக்கலத்துக்கு வரும் படி வருந்தி அழைத்தார்கள். இராஜ குமாரன் அந்தப் பெண்ணுக்கு ஆறுதல் கூறி விடைபெற்றுக் கொண்டான். கப்பலில் ஏறிச் சென்றான். அந்தப்

# உங்களுக்கே... பருவ மங்கையின் பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மிளிரும் எழிலுக்கே... ஜேய் அழகு சோப்! சரும நெகிழ்ச்சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்தமிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. விலை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினாத் தாளுறை தரித்தது ஜேய் ஒன்றுதான்.

ஜேய்-நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

## ஜேய்

அழகு சோப்

உங்கள் மனங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
**தயாரிப்பு**

Bensons 1142 Tam

பெண் அவன் போன பிறகு ரொம்பவும் வருத்தப்பட்டுக் கண்ணீர் பெருக்கினாள். அதை அவள் தகப்பன் பார்த்தான். ஒரு படகில் அவளை ஏற்றிக்கொண்டு கடல் கடந்து சென்றான். கலங்கரை விளக்கம் ஒன்றை அடைந்து கரையில் இறங்கினான். அங்கே ஒரு குடும்பத்தார் தகப்பனையும் மகளையும் வரவேற்றார்கள். எல்லாருமாக மாட்டு வண்டியில் ஏறிப் பிரயாணம் போனார்கள். கோட்டை மதிள் உள்ள ஒரு பட்டணத்தை அடைந்தார்கள். அங்கே அரண்மனை மேன் மாடத்தில் இராஜகுமாரன் தலையில் கிரீடத்துடன் நின்றான். அவனைச் சூழ்ந்து ஆடை அலங்காரங்கள் புனைந்த பலர் நின்றார்கள். அதைப் பார்த்த அந்த இளம் பெண்ணின் மனம் கலங்கியது. அவள் ஒரே ஓட்டமாக ஓடினாள். கடற்கரையை அடைந்தாள். கலங்கரை விளக்கத்தின் மேலேறிக் கீழே குதித்தாள். அலைகள் அவளைத் தாங்கிக் கொண்டன. படகில் வந்த ஒருவன் அவளைத் தூக்கிப் படகில் ஏற்றிக் காப்பாற்றினான். அவளைப் பேய் பிடித்திருக்கிறதென்று எண்ணி ஒரு கோயிலில் கொண்டு போய் விட்டான். கோயில் பூசாரி அவளுக்கு விபூதி போட்டு வேப்பிலை அடித்தான்.

யாரோ ஒரு பெரிய ராணி சுவாமி தரிசனம் செய்ய அந்தக் கோயிலுக்கு வந்தாள். பூசாரி அந்தப் பெண்ணைப் பற்றி ராணியிடம் சொன்னான். ராணி கர்ப்பந் தரித்திருந்தாள். அந்தப் பெண்ணும் தன்னைப் போலவே கர்ப்பவதி என்று அறிந்தாள். பல்லக்கில் ஏற்றிக் கொண்டு அரண்மனைக்கு அழைத்துப் போனாள். அரண்மனைத் தோட்டத்தில் அந்தப் பெண்ணுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. ராணி வந்து இரண்டு குழந்தைகளில் ஒன்றைத் தான் வளர்ப்பதாகச் சொன்னாள். முதலில் வலைஞர் பெண் அதை மறுத்தாள். பிறகு யோசித்துப் பார்த்தாள். இரண்டு குழந்தைகளுமே அரண்மனையில் வளரட்டும் என்று தீர்மானித்தாள். குழந்தைகளை விட்டு விட்டு நள்ளிரவில் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப் போய்விட்டாள். வெகு காலம் காட்டில் திரிந்து கொண்டிருந்தாள். ஆனால் குழந்தைகளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அடிக்கடி வந்து விடும். ஆற்றங்கரை ஓரமாக வந்து மரங்களின் மறைவில் ஒளிந்திருப்பாள். படகில் ராஜாவும் ராணியும் குழந்தைகளும் வருவார்கள். தூரத்திலிருந்தபடியே பார்த்து விட்டுப் போய் விடுவாள். ஒரு சமயம் ஒரு குழந்தை படகிலிருந்து தவறி விழுந்துவிட்டது. அதை யாரும் கவனிக்கவில்லை. இவள் நீரில் மூழ்கிக் குழந்தையை எடுத்துக் கொடுத்தாள். உடனே மீண்டும் நதி வெள்ளத்தில் மூழ்கிச் சென்று அக்கரையை அடைந்து காட்டில் மறைந்து விட்டாள்.

* * *

இவ்வளவு நிகழ்ச்சிகளும் காவிக் கோட்டினால் தத்ரூபச் சித்திரங்களாக அச்சுவரில் வரையப்பட்டிருந்தன. இளவரசர் அருள்மொழிவர்மர் அளவில்லா ஆர்வத்துடனும் அதிசயத்துடனும் அச்சித்திரங்களைப் பார்த்துக் கொண்டு வந்தார். கடைசிச் சித்திரம் வந்ததும் இளவரசர், "நதியிலிருந்து காப்பாற்றப் பட்ட சிறுவன் நான்; காப்பாற்றியவள் நீ!" என்று சமிக்ஞையாகச் சுட்டிக் காட்டினார். அந்த மூதாட்டி இளவரசரைக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி மோந்தாள்.

பின்னர் அந்த மண்டபத்தின் இன்னொரு மூலைக்கு இளவரசரை அழைத்துச் சென்றாள். அங்கே எழுதியிருந்த சில சித்திரங்களைக் காட்டினாள். அவை அவளுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் அல்ல. இளவரசருக்கு நேரக் கூடிய அபாயங்களைப் பற்றி அச்சித்திரங்களின் மூலமாகவும் சமிக்ஞைகளின் மூலமாகவும் எச்சரிக்கை செய்தாள்.

இவ்வளவையும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் மண்டபத்தின் ஓரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். நந்தினியின் முகத்தையும் இந்த ஊமை ஸ்திரீயின் முகத்தையும் வந்தியத்தேவன் அடிக்கடி ஒத்திட்டுப் பார்த்தான். அவன் மனத்தில் பற்பல எண்ணங்கள் உதித்தன; பற்பல சந்தேகங்கள் தோன்றின. அவற்றைக் குறித்துப் பேச அது சந்தர்ப்பம் அன்று எனப் பேசாதிருந்தான்.

யானைச் சிலைகள் பாதுகாத்த அந்தரங்க மண்டபத்திலிருந்து அவர்கள் வெளியே வந்தார்கள். மூதாட்டி அவர்களை அழைத்துக் கொண்டு அந்த ஸ்தூபத்தின் சிகரத்தை நோக்கி ஏறினாள். அவளுடைய தேக வலிமையைக் குறித்து மற்றவர்கள் அதிசயித்தார்கள். வந்தியத்தேவனுக்கு மிகவும் களைப்பாயிருந்தது. ஆயினும் வெளியில் சொல்லாமல் ஏறினான்.

பாதி ஸ்தூபம் ஏறியதும் நின்று பார்த்தார்கள். நகரத்தின் ஓரிடத்தில் தீயின் ஜுவாலை கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

''ஆகா! மகாஸேன சக்கரவர்த்தியின் புராதன மாளிகை தீப்பற்றி எரிகிறது!'' என்றார் இளவரசர்.

''நாம் படுத்திருந்த இடமா ?''

''அதுவேதான் !''

''அங்கே நாம் படுத்துத் தூங்கியிருந்தால்....?''

''நாமும் ஒரு வேளை அக்கினி பகவானுக்கு உணவாகியிருப்போம் !''

''அதுதான் நாம் படுத்திருந்த அரண்மனை என்று இத்தனை தூரத்திலிருந்தபடி எதனால் சொல்கிறீர்கள் ?''

''மண்டபத்துக்குள்ளே நான் பார்த்த சித்திரங்கள் என்னுடன் பேசின!''

''எங்களுக்குக் கேட்கவில்லையே?''

''அதில் ஒன்றும் அதிசயமில்லை. சித்திரங்கள் ஒரு தனி பாஷையில் பேசும். அந்த பாஷை தெரிந்தவர்களுக்குத்தான் அவற்றின் பேச்சு விளங்கும்.''

''அந்தச் சித்திரங்கள் தங்களுக்கு இன்னும் என்ன தெரிவித்தன ?''

''என் குடும்ப சம்பந்தமான பல இரகசியங்களைச் சொல்லின. இந்த இலங்கைத் தீவை விட்டு உடனே போய்விடும்படியும் தெரிவித்தன!....''

'' சித்திரங்களின் பாஷை வாழ்க ! வைஷ்ணவரே! என் கட்சி ஜயித்தது!'' என்றான் வந்தியத்தேவன்.

''இளவரசே ! சித்திரங்கள் அத்துடன் நிறுத்த வில்லை. இலங்கையில் உள்ள வரையில் கூரையின் கீழ்ப் படுக்க வேண்டாம். வீடுகளின் ஓரமாக நடக்க வேண்டாம். மரங்களின் அடியில் போக வேண்டாம் என்றும் சொல்லவில்லையா?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''சரியாகச் சொன்னீர் ! உமக்கு எப்படித் தெரிந்தது ?''

''தங்களுக்குச் சித்திரங்களின் பாஷை தெரியும். அடியேனுக்கு அபிநய பாஷை தெரியும். தங்கள் குல தெய்வம் தங்களிடம் பேசிக் கொண்டிருந்த போது அத்தெய்வத்தின் அபிநய முக பாவங்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''சந்தோஷம்; இரவு இன்னும் ஒரு ஜாமந்தான் மிச்சமிருக்கிறது. இந்த ஸ்தூபத்தின் உச்சியில் ஏறிச் சிறிது நேரமாவது படுத்துத் தூங்கி விட்டுப் பொழுது விடிந்ததும் புறப்படுவோம்'' என்றார் அருள்மொழிவர்மர்.

* * *

மறு நாள் உதயத்தில் சூரிய கிரணங்கள் சுளீர் என்று அடித்து வந்தியத்தேவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பின. முதல் நாளிரவு நடந்த உண்மையான நிகழ்ச்சிகள் போதாவென்று சதிகாரர்

களும், தீ வைப்பவர்களும், ஊமைகளும், செவிடர்களும் மரத்தில் ஏறும் கரடிகளும், பேய் பிசாசுகளும், புத்த பிக்ஷுக்களும், மணிமகுடங்களும் ஒரே குழப்பமாக வந்தியத்தேவனுடைய கனவிலேயும் வந்து துன்புறுத்தினார்கள். சூரிய வெளிச்சத்தில் அவை யெல்லாம் மாயக் கனவுகளாகி மறைந்தன. குழப்பமும் பீதியும் பறந்தன.

இளவரசரும் ஆழ்வார்க்கடியானும் முன்னதாக எழுந்து பிரயாணத்துக்கு ஆயத்தமாகி யிருப்பதை வந்தியத்தேவன் கண்டான். அவனும் அவசரமாக ஆயத்தமானான். மூன்று பேரும் ஸ்தூப சிகரத்திலிருந்து இறங்கினார்கள். நடு வீதிகளின் வழியாகவே நடந்து சென்று மகாமேக வனத்தை நோக்கிச் சென்றார்கள். அந்த நந்தவனத்தின் மத்தியிலேதான் புராதனமான, ஆயிரத்தைந்நூறு வயதான, மிகவும் புனிதத் தன்மை வாய்ந்த போதி விருட்சம் இருந்தது.

பிக்ஷுக்களும் பிக்ஷுக்களல்லாத பக்தர்கள் பலரும் போதி விருட்சத்தை வலம் வந்தும் மலர்களைச் சொரிந்தும் வணங்கிக் கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அருள்மொழிவர்மரும் அந்தப் போதி விருட்சத்துக்கு வணக்கம் செலுத்தினார். "உலகத்தில் இராஜ்யங்களும் இராஜ்யங்களை ஆண்ட மன்னர்களும் மறைந்து போய் விடுவார்கள். ஆனால் தர்மம் என்றென்றைக்கும் நிலைத்து நிற்கும் என்பதற்கு இந்தப் போதி விருட்சம் நிதர்சனமாயிருக்கிறது!" என்று இளவரசர் மற்ற இருவரையும் பார்த்துக் கூறினார். இப்படிச் சொல்லிக் கொண்டே சுற்றுமுற்றும் பார்த்தார். ஒரு மூலையில் மூன்று குதிரைகள் பிரயாணத்துக்கு ஆயத்தமாக நின்றன. மூன்று குதிரைகளையும் பிடித்துக் கொண்டு மூன்றுபேர் நின்று கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அருகே சென்றதும் அவர்கள் மூவரும் முகமலர்ந்து மரியாதையுடன் வணங்கினார்கள். இளவரசர் அவர்களை ஏதோ கேட்டுத் தெரிந்து கொண்டார். வந்தியத்தேவனைப் பார்த்து, "இராத்திரி எரிந்தது நாம் படுத்திருந்த மகாசேனரின் அரண்மனைதான்! நாமும் அதில் எரிந்து போய் விட்டோமோ என்று இவர்கள் பயந்து கொண்டிருந்தார்கள். நம்மை உயிரோடு பார்த்ததும் இவர்களுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை!" என்றார்.

"ஆயிரத்தைந்நூறு வயதான அரச மரம் இன்னும் நிற்பது என்னமோ உண்மைதான். ஆனால் தர்மம் செத்துப் போய் எத்தனையோ நாளாகி விட்டது!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

"இனி ஒரு தடவை அவ்விதம் சொல்லாதே! நான் ஒருவன் உயிரோடிருக்கும் போது தர்மம் எப்படிச் சாகும்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

மூன்று பேரும் குதிரைகள் மீது ஏறிக் கொண்டு புறப்பட்டார்கள். அநுராதபுர நகரத்தின் வடக்கு வாசல் வழியாக வெளியேறினார்கள். திருவிழாக் கூட்டம் இன்னமும் நகரிலிருந்து நாலாபுறமும் 'ஜே ஜே' என்று சென்று கொண்டிருந்தபடியால் இவர்களை யாரும் கவனிக்கவில்லை.

அநுராதபுரத்துக்கு வடகிழக்கில் ஒரு காத தூரத்தில் மகிந்தலை என்னும் சிறிய பட்டணம் இருந்தது. "அசோக சக்கரவர்த்தியின் குமாரர் மகிந்தர் முதன் முதலில் இந்த ஊரிலேதான் வந்திறங்கிப் புத்த மதத்தை உபதேசிக்கத் தொடங்கினார்! எப்படிப்பட்ட பாக்கியசாலி அவர்! ஆயுதந் தாங்கிய படைகளை அழைத்துக் கொண்டு நாடு கவர்வதற்கு அவர் போகவில்லை. கொலைகாரர்களிடம் சிக்காமல் ஒளிந்து மறைந்து திரிய வேண்டிய அவசியமும் அவருக்கு ஏற்பட வில்லை!" என்றார் அருள்மொழிவர்மர்.

"அவருக்குக் கொடுத்து வைத்திருந்தது அவ்வளவுதான்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

இளவரசர் நகைத்தார்.

"நீர் எப்போதும் என்னை விட்டுப் பிரியவே கூடாது. நீர் பக்கத்தில் இருந்தால் எப்படிப்பட்ட கஷ்டமும் சந்தோஷமாகிவிடும்" என்றார் இளவரசர்.

"அதே மாதிரி எப்படிப்பட்ட சந்தோஷமும் கஷ்டமாகி விடும்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

இச்சமயத்தில் சாலையில் அவர்களுக்கு எதிர்ப் பக்கத்தில் ஒரு புழுதிப் படலம் தெரிந்தது. பல குதிரைகள் நாலு கால் பாய்ச்சலில் வரும் சத்தமும் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் சிறிய குதிரைப் படை ஒன்று கண்ணுக்குத் தெரிந்தது. குதிரை வீரர்கள் கையில் பிடித்திருந்த வேல் முனைகள் காலை வெய்யிலில் பளபள வென்று ஜொலித்தன.

"ஐயா! உறையிலிருந்து கத்தியை உருவுங்கள்!" என்று எச்சரித்தான் வந்தியத்தேவன். (தொடரும்)

# உங்கள் கண்களுக்கு இதமான ஒளி தேவை!

உங்கள் இல்லத்தில், தேவைக்கேற்றபடி சீரான ஒளியைத் தருவதற்கு பலதரப்பட்ட பிலிப்ஸ் லாம்புகள் இருக்கின்றன. உதாரணமாக, பிலிப்ஸ் கிளியர் லாம்புகள் மற்றும் ஆர்ஜண்டா லாம்புகள் உள்ளன. கண்கூசாத இதமான ஒளி தேவைப்படும் வேலைகளுக்கு—அதாவது, படிப்பு, வீட்டுவேலை அல்லது தையல் வேலைக்கு—பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகள் சிறந்தவை. வீடுகளில், கண்கூசாத இதமான ஒளி அவசியம் என்பதைக் கருதியே இந்த லாம்புகள் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. ஒளியை ஒரே சீராகப் பரப்பும் பொருட்டு பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகளில் ஒரு விசேஷ வெள்ளைப் பூச்சு பூசப்பட்டிருக்கிறது. இதனால் கண்கள் கூசாமல் வெளிச்சம் ஒரே சீராகப் பரவும். ஆகவே, சிறியவர் முதல் பெரியவர் வரை, குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் ஏற்ற லாம்புகள் இவை!

பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகள் 40, 60 மற்றும் 100 வாட்டுகளில் கிடைக்கின்றன.

கிளியர் லாம்புகள், அலங்கார லாம்புகள், டார்ச் மற்றும் டயல் லாம்புகள், TL ப்ளுரஸண்ட் லாம்புகள், மெர்குரி வேபர் லாம்புகள் போன்றவற்றை பிலிப்ஸ் இந்தியாவிலேயே தயாரிக்கிறது. பிலிப்ஸ் தயாரிப்புகளின் பட்டியல் நாளுக்கு நாள் நீண்டு கொண்டே போகிறது. புதிய புதிய மின்சார விளக்குகளை வழங்குவதில் அன்று போலவே இன்றும் முன் நிற்கிறது பிலிப்ஸ். நினைவிருக்கட்டும், உங்களுக்கு எத்தகைய லாம்பு தேவைப்பட்டாலும் பிலிப்ஸிடம் கிடைக்கும்!

**பிலிப்ஸ்**
பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்






**பிலிப்ஸ்**
**ஆர்ஜண்டா**
இதமான
ஒளி தருவதில்
இணையற்றது

HTA-PHL.8302




## 19. கூனியின் போதனை

அதுவரையில் ராமனைத் தன் வயிற்றில் பிறந்த குழந்தையாகவே பாவித்து வந்த கைகேயி, இப்போது மந்தரையின் உபதேச வலையில் சிக்கிக் கெட்டுப் போனாள்.

"பயமாக இருக்கிறது. என்ன செய்யலாம் சொல், மந்தரா! கௌசல்யைக்கு அடங்கி நான் அவளுடைய வேலைக்காரியாகப் போவதா? ஒரு நாளும் முடியாது. பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தே தீர வேண்டும். நீ சொல்வதே சரி. ராமனை வனத்துக்கு அனுப்பிவிட வேண்டும் என்பது நிச்சயம். இதற்கு என்ன உபாயம் செய்யலாம்? சொல், நீதான் சாமர்த்தியசாலி" என்று மந்தரையைச் சரணமடைந்தாள். அந்தச் சமயம் கைகேயியின் கண்களுக்கு மந்தரையின் கூன் வடிவம் கூட மிகச் சௌந்தரியமாகக் காணப்பட்டது. இது வெறும் ஹாஸ்யமல்ல. சூட்சுமமான மனத் தத்துவம்.

"கைகேயி! இது என்ன விந்தை? உபாயம் என்னையா கேட்கிறாய்? உனக்கு ஏன் இவ்வளவு மறதி வந்து மூடிக் கொண்டது? அல்லது வேஷம் போடுகிறாயா? நானே சொல்ல வேண்டுமென்றால் சொல்லுகிறேன், கேள்" என்றாள் மந்தரை.

இதைச் சொல்லிவிட்டுக் கொஞ்சம் நிறுத்தினாள்.

"சொல், சொல். எப்படியாவது பரதனுக்குப் பட்டம் சூட்ட வேண்டும். ராமனுக்கு அபிஷேகம் நடக்காமல் செய்ய வேண்டும்" என்றாள் கைகேயி பரபரப்பாக.

"சொல்லுகிறேன். அவசரப்படாதே. முன்னொரு காலத்தில் உன் புருஷன் தசரதச் சக்கரவர்த்தி தெற்கே சம்பரனோடு யுத்தம் செய்தது நினைவிருக்கிறதா? நீயும் கூட இருந்தாயே? இந்திரனுக்கு உதவியாகப் போனான் அல்லவா உன் புருஷன்? வைஜயந்தி நகரத்துச் சம்பரனை இந்திரன் சமாளிக்க முடியாமல் தசரதனுடைய உதவியை நாடினான். தசரதன் சென்று சண்டையிட்டு உடம்பெல்லாம் காயப்பட்டு நினைவிழந்து போனான் அல்லவா? அப்போது அவனுடைய தேரை நீயே நடத்திச் சாமர்த்தியமாக யுத்த களத்திலிருந்து வெளியே கொண்டு போய், அரசன் உடலில் பாய்ந்திருந்த அம்புகளையெல்லாம் மெதுவாக எடுத்து நினைவு தெளியச் செய்து அவன் உயிரைக் காப்பாற்றினாய். மறந்து விட்டாயா?

"அப்போது அவன் உனக்கு என்ன சொன்னான்? 'இரண்டு வரங்களைக் கேள்.

எதைக் கேட்டாலும் நான் தருவேன்' என்று அவன் சொல்ல, 'எனக்கு வேண்டும்போது கேட்கிறேன். இப்போது வேண்டாம்' என்று நீ சொல்ல, 'அப்படியே' என்று அவன் கூறினான் அல்லவா? நீயே எனக்கு இதைச் சொல்லியிருக்கிறாய். நீ மறந்துவிட்டாய். நான் மறக்கவில்லை. அதை வைத்து இப்போது காரியத்தைச் சாதிக்கலாம். ராம பட்டாபிஷேகத்தை நிறுத்திப் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய் என்று புருஷனைக் கேள். இரண்டு வரத்தில் முதலாவதாக அதைக் கேள். இரண்டாவதாக ராமனைப் பதினான்கு வருஷம் காட்டுக்கு அனுப்பி விட வேண்டும் என்று கேள். பாபம் என்று தயங்காதே! பயப்பட்டு நடுங்காதே! நான் சொல்வதைக் கேள். அப்படி ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டால்தான், ஜனங்கள் அவனிடம் வைத்திருக்கும் அபார அன்பும் பற்றும் நாளடைவில் மறைந்து போய், உன் குமாரனுடைய யுவராஜ பட்டம் ஊர்ஜிதப்படும். போய்க் கோபாக்கிருஹத்தில் தரையில் படுத்துக்கொள். பழைய துணி உடுத்திக் கொண்டு தரையில் கிட. அரசன் வந்தபோது பேச வேண்டாம். கண்ணெடுத்தும் பார்க்க வேண்டாம். உன் துயரத்தை அவன் சகிக்க மாட்டான் என்பது எனக்குத் தெரியும். நம்முடைய காரியம் வெற்றியுடன் முடியும்'' என்றாள் மந்தரை.

''அரசன் என்னவெல்லாமோ ஆசை காட்டுவான். அதற்கு உட்படாதே! கேட்ட இரண்டு வரமே வேண்டும் என்று பிடிவாதமாக இரு. சத்தியத்துக்குப் பயந்த அரசன் கட்டாயம் வழிக்கு வருவான். உன்னிடம் அவன் வைத்திருக்கும் காதலின் வேகம் எனக்குத் தெரியும். உனக்காக உயிரைக் கொடுக்க வேண்டுமானாலும் கொடுப்பான். நெருப்பில் விழச் சொன்னாலும் விழுவான். நான் சொன்னபடி செய். பயப்பட வேண்டாம். ராமனை வனத்துக்கு அனுப்பினாலொழிய உன் காரியம் சாதகமாகாது. ராமன் வெளியேற்றப்பட வேண்டும். அப்போதுதான் பரதனுக்கு நீ சம்பாதித்துத் தரும் பதவி ஸ்திரமாகும். இல்லாமற் போனால் பெற்ற பதவி கனவாக மறைந்து போகும். இதை நினைவில் வைத்துக் கொள். இந்த விஷயத்தில் விட்டுக் கொடுக்காதே! ஜாக்கிரதை!'' என்றாள் மறுபடியும்.

கூனியின் இந்த உபதேசத்தை ஏற்றதும் முதலில் பயத்தில் மூழ்கிய கைகேயியின் முகம் பிறகு மலர்ந்தது.

''உன் புத்திகூர்மையை நான் என்னவென்று சொல்வேன்! மந்தரா! என்னைக் காப்பாற்றினாய்!'' என்று சொல்லிக் குதிரைக் குட்டியைப் போலத் துள்ளிக் குதித்தாள்.

''தாமதம் செய்யாதே. செய்ய வேண்டியதை உடனே செய். கரை உடைந்து போன பிறகு ஏரிக்கு அணை கட்ட முடியாது. சொன்னதையெல்லாம் கவனத்தில் வை. பிடிவாதமாக இருக்க வேண்டும். நிச்சயமாக உன் காரியம் சித்தியாகும்'' என்று ராமனை வனத்துக்கு அனுப்புவதைப் பற்றி மறுபடியும் வற்புறுத்திச் சொன்னாள்.

கைகேயி, ''சந்தேகப்படாதே. நான் உறுதியாக இருப்பேன்! இதோ பார்!'' என்று அப்போதே கோபக்கிருஹத்துக்குள் நுழைந்து தன் ஆபரணங்களையெல்லாம் சிதறி இறைத்து விட்டு, துணியை மாற்றிக் கொண்டு தரையில் படுத்துக் கொண்டாள். படுத்தவள் அழுத குரலில் மந்தரைக்குச் சொன்னாள்: ''மந்தரா! என் தந்தை கேகய ராஜனிடம் நீயே போய்ச் சொல்லுவாய். பரதனுக்குப் பட்டாபிஷேகம் என்றோ அல்லது கைகேயி இறந்தாள் என்றோ இரண்டில் ஒன்று நீயே போய்ச் செய்தி சொல்லிவிடு. என் மந்தரையே!'' இவ்வாறு சொல்லி உண்மையிலேயே தசரதன் செய்ததெல்லாம் மோசம் என்று எண்ணி அவன் மேல் கடுங் கோபத்தோடு தரையில் படுத்தாள்.

அப்போதும் அவள் அழகு குறையவில்லை. சிரித்தாலும் அழகு. கோபித்தால் அதுவும் ஒரு அழகு அல்லவா அழகைப் பெற்ற பெண்ணின் முகம்?

பாப எண்ணம் நன்றாகப் புகுந்துவிட்டது. கைகேயியினுடைய சுபாவம் முற்றிலும் மாறிப் போயிற்று. தன்னுடைய வாழ்க்கை அடிமை வாழ்க்கையாகப் போகும்; பரதன் உயிருக்குப் பெரிய ஆபத்து அருகில் வந்துவிட்டது என்கிற நினைவானது பிசாசு போல் அவள் உயிரைப் பிடித்துக் கொண்டு விட்டது. இதுவரையில் என்றும் செய்யாத வேலை. புருஷனை ஒரு பெரிய விஷயத்திலே நிர்ப்பந்திப்பதினால் ஏற்படக்கூடிய கூச்சமும், ராமனைக் காட்டுக்கு அனுப்பு என்று கேட்கப் புகுவதில் உண்டாகும் வெட்கமும் பாப பயமும் — அனைத்தையும் உடனே மனத்தில் வெள்ளோட்டம் நடத்திவிட்டாள். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டு விட்டாள்.

மிகப் பெரிய துக்கம் மேலிட்டவளாக உயிர்த்தும், வியர்த்தும், கண்களை மூடியும், நாக கன்னிகையின்

அழகைப் பெற்ற கைகேயி கூந்தலை விரித்தும் தூசி படிந்த தரையில் கிடந்தாள். ஓர் அழகிய பறவை வேடனுடைய அம்பால் தாக்கப்பட்டுக் கீழே திடீரென்று விழுந்தது போல் தரையில் கிடந்தாள். அவளுடைய உடலை அலங்கரித்த ஆபரணங்களும் சகல திவ்விய ஆபரணங்களும் இங்கு மங்கும் கருத்த ஆகாயத்தில் நட்சத்திரங்களைப்போல் பிரகாசித்துக் கொண்டு ஊடல் அறையில் சிதறிக் கிடந்தன.

# 20. சத்தியம் தவறுதீர்!

சபையில் காரியங்களை யெல்லாம் முடித்து விட்டுப் பட்டாபிஷேக மகோற்சவத்துக்காகச் செய்ய வேண்டியதை யெல்லாம் பூர்த்தியாக உத்தர விட்டு, ஒரு கவலையும் இனி இல்லை என்று சந்தோஷமடைந்து தசரதன் தன் காதல் மனைவி கைகேயி தேவியினுடைய அந்தப்புரத்தை நோக்கிச் சென்றான். அரசியல் காரியங்களைக் கிரமப்படி கேட்க வேண்டியவர்களை யெல்லாம் கேட்டுச் சம்மதம் பெற்றுப் பட்டாபிஷேகத் தீர்மானம் முடிந்து விட்டது. ஒரு பெரிய பாரம் தீர்ந்து கவலையற்ற ஓய்வு ஏற்பட்டால் உடலின் பசுதர்மம் தலையெடுப்பது இயற்கை. உடனே போய்த் தன் அழகிய காதல் மனைவியோடு விஷயங்களைச் சொல்லிச் சல்லாப சுகம் அடையலாம். பொழுது விடிந்ததும் உற்சவம். அதுவரையில் ஆசை தீர போகத்தில் மூழ்கலாம் என்கிற எண்ணத்தோடு வெள்ளை மனத்துத் தசரதன் அந்தப்புரத்தில் புகுந்தான்.

எப்போதுமே இளைய மனைவியின் அரண்மனை விசேஷமான அழகு வாய்ந்தது. ரமணீயமான தோட்டமும், வாவிகளும், மேலே பறக்கும் பறவைகளும், நீரில் விளையாடும் பறவைகளும் சித்திரத் தோகை விரித்து ஆடும் மயில்களும், மரங்களிலெல்லாம் விதம் விதமான புஷ்பங்கள் மலர்ந்து பிரகாசிக்கும் காட்சியுமாக அந்த அந்தப்புரம் எப்போதையும் விட அதிக அழகு பெற்று விளங்குவதாக எண்ணினான் தசரதன். ஆகாயத்தில் ராகு கிரகம் விழுங்கக் காத்துக் கொண்டிருக்கிற நாளில் அதை அறியாத சந்திரன் பயமின்றிப் பூரண கலையுடன் உதயமாவது போல் முகத்தில் மகிழ்ச்சி ஜொலிக்க தசரதன் கைகேயியின் அழகிய இல்லத்தில் பிரவேசித்தான். அங்கே என்ன காத்திருக்கிறது என்று அறியவில்லை.

அரண்மனையில் வாசனைத் திரவியங்கள், பான விசேஷங்கள் வழக்கம் போல் எல்லாம் அந்த அந்த இடத்தில் வைக்கப்பட்டிருந்தன. அவனுடைய பிரகிருதி வேகம் அதிகரித்தது. ஆசனங்களை யெல்லாம் பார்த்தான். அவனுடைய காதலியைக் காணவில்லை.

இன்பத்துக்கென்றே தனியாக அமையப் பெற்ற மனைவியாவாள் கைகேயி. அவள் ராஜ விவகார விஷயங்கள் எதிலும் தலையிடுவதில்லை. அவளுடைய அந்தப்புரம் நுழைந்ததுமே அரசனுக்கு உள்ளம் முழுதும் காதல் வேகம் பொங்கும். எப்போதும் அரசன் வரும் சமயம் அவள் காத்திருந்து எதிர்கொண்டு அணைத்துக் கொள்ளுவாள். இன்று ஏன் அவள் காணப்படவில்லை? அரசன் கொஞ்சம் திகைத்தான். படுக்கைகள் ஆசனங்கள் எல்லாம் மறுபடியும் உற்றுப் பார்த்தான். விளையாட்டுக்காக ஒளிந்து கொண்டிருக்கிறாளோ என்று எண்ணி மகிழ்ச்சியடைந்து திரும்பத் திரும்பக் கவனித்துப் பார்த்தான். என்றும் இப்படி இருந்தது இல்லையே. என்ன காரணம் என்று யோசித்து அங்கிருந்த ஒரு காவல் பெண்ணைக் கேட்டான். அவள் கைகூப்பி, ''சுவாமி! தேவியார் மிகக் கோபங் கொண்டு உள்ளே போய் விட்டார்கள்!'' என்றாள்.

அரசன் பயந்தான். உள்ளே சென்று ஊடலறைக்குள் நுழைந்தான்; கொஞ்சமும் எதிர்பாராத விபரீதக் காட்சியைக் கண்டான்.

கைகேயி அரசனைக் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. அப்பாவி அரசனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. எவ்வாறு விளங்கும்? கல்மஷம் என்பது கொஞ்சமும் அவன் உள்ளத்திலில்லை. கைகேயியினுடைய உள்ளத்திலோ பாபம் நிறைந்து அடைத்துக் கொண்டிருந்தது. இவன் வயதோ அதிகம். அவளோ இன்னும் சிறு வயது. காதல் உணர்ச்சியோ அரசனுக்கு அதிக வேகத்திலிருந்தது. இந்த நிலையில் அவனுக்கு ஒன்றும் விளங்காமல் பைத்தியக்காரனைப் போல் நடந்து கொண்டான்.

கீழே கிடந்த கைகேயிக்கு அருகில் இவனும் தரையில் உட்கார்ந்து, அவள் தலையை மெதுவாகத் தூக்கித் தன் மடியின் மேல் வைத்துக் கொண்டு தடவிக் கொடுத்தான்.

''உனக்கென்னவாயிற்று? உடம்பில் என்ன? எங்கேயாவது வலியா? எனக்குச் சேவை செய்யச் சிறந்த வைத்தியர்கள் இல்லையா? உடனே வரவழைக்கிறேன். எதுவாயிருந்தாலும்

# லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ

பருகியவர் மீண்டும் மீண்டும் விரும்பிக்
கேட்கும் பானம்! கோப்பைக்குக்
கோப்பை திருப்தி தரும் சிறந்த மணம்!
தரம் நிறைந்த கெட்டியான பானம்!
பருகுவதில் இன்பம்! விலையிலும் சிக்கனம்!

ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தூள்வகை
தேயிலைகளில் ஏற்றமிக்கது.







லிப்டன் என்றாலே
நல்ல டீ

LHGC-II TAM

சரிப்படுத்தி விடுவார்கள். நீ பயப்பட வேண்டாம்'' என்றான்.

கைகேயி பெருமூச்சு விட்டாள். பேசவில்லை.

''உன்னை யாராவது அரண்மனையில் அவமதித்துப் பேசி விட்டார்களா? யாராவது ஏதாவது தவறு செய்திருந்தால் எனக்குச் சொல், கடுந்தண்டனை விதித்து விடுவேன். யாராவது உன்னை அலட்சியம் செய்து உனக்குக் கோபம் உண்டாக்கினார்களா? அல்லது உனக்கு ஏதாவது வேண்டியதாயிருந்து என்னை யறியாமல் அதை நான் கவனிக்காமல் விட்டு விட்டேனா, சொல்!''

இவ்வாறெல்லாம் சாதாரணமாகப் பெரிய வீட்டு நிருவாகத்தில் ஏற்படக் கூடிய குறைகளையெல்லாம் கேட்டுப் பார்த்தான்.

கைகேயியோ இதையெல்லாம் ஒன்றும் கவனிக்காமல் பிசாசு பிடித்தவள் போல் பேசாமல் கிடந்தாள்.

''உனக்கு என்ன வேண்டுமானாலும் கேள். யாரைத் தண்டிக்க வேண்டும்? தண்டிப்பேன். யாரைத் தண்டனையிலிருந்து விடுவிக்க வேண்டும்? உடனே கொலையாளியாக இருந்தாலும் விட்டு விடுவேன்!'' — இப்படியெல்லாம் காம மோகத்தால் பீடிக்கப்பட்டு, கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

''எனக்கு உள்ள சர்வாதிகாரம் உனக்குத் தெரியாதா? யாருக்கு என்ன கொடுக்க வேண்டும்? எந்தத் தேசத்தில் யாரை என்ன செய்ய வேண்டும், சொல். அதை உடனே செய்து விடுவேன்'' என்றான் மறுபடியும்.

கைகேயி எழுந்து உட்கார்ந்தாள். அரசனுக்கு உடனே சந்தோஷமாய் விட்டது. கைகேயி பேச ஆரம்பித்தாள்:

''என்னை யாரும் அலட்சியமாகப் பேசவில்லை. யாரும் நிந்திக்க வில்லை. அவமானப்படுத்தினதில்லை. அரசனே, உம்மால் ஆக வேண்டிய காரியம் இருக்கிறது. அதை நீர் செய்து தர வேண்டும். சம்மதம் தந்தால் சொல்லுகிறேன்'' என்றாள்.

இதைக் கேட்டதும் அப்பாவியான தசரதனுக்கு மனம் பூரித்து விட்டது. ''எது வேண்டினும் அதைச் செய்யும் சக்தி எனக்கிருக்க, இனி என்ன கவலை?'' என்று தைரியம் அடைந்தான். முகம் மலர்ந்து, ''கைகேயி! உடனே சொல். உனக்கு என்ன வேண்டும்? அதைச் செய்கிறேன். எதன் மேல் ஆணையிட்டுச் சொல்ல வேண்டும்? உனக்குப் பிரியமானது எது? பெண்களுக்குள் நீதான் என் அன்பின் உச்சிக் கோடு. ஆண்களுக்குள் ராமசந்திரனைவிட எனக்கு வேறு யாரும் பிரியமில்லை. அந்த ராமன் பேரில் ஆணையிட்டுச் சொல்கிறேன். நீ எது வேண்டுமென்கிறாயோ அதைச் செய்வேன். இது உறுதி'' என்றான்.

பாபம் முற்றிக் கொண்டு வந்தது. ''ராமன் மேல் ஆணை'' என்றதுமே கைகேயிக்குத் தைரியம் பிறந்தது.

''அப்படியா? ஆனால் சரி, ராமன் மேல் ஆணையிட்டுச் சொல்வீர். நான் கேட்பதை மறுக்காமல் தருவதாக மறுபடியும் சபதம் செய்வீராக'' என்றாள்.

''என் காதல் அரசி! அப்படியே! இதோ சபதம் செய்கிறேன். என் அன்புக்குரிய ராமன் மேல் ஆணை. நான் அடைந்த சகல புண்ணியத்தின்மேலும் ஆணை. நீ என்ன விரும்புகிறாயோ, அதைச் செய்வேன். இது சத்தியம்'' என்றான் அரசன். (தொடரும்)




சமீபத்தில் வேல்ஸ் இளவரசர் சார்லஸ் முடிசூட்டிக்கொண்டார். அவரது இளமைப் பிராயத்து நிகழ்ச்சிகளைத் தொகுத்துத் தருவதில் பெருமை யடைகிறோம்.

1. சார்லஸ் கிரிக்கெட் ஆடுகிறார். 2. கேம்பிரிட்ஜ் மாணவர் சார்லஸ் மற்றொரு மாணவர் அறையில் நாடக ஒத்திகை நடத்துகிறார். 3. இளவரசர் சார்லஸ் விண்ட்ஸர் மாளிகையில் ஐந்து வயது தம்பி எட்வர்டோடு விளையாட்டு மோட்டார் ஓட்டுகிறார். 4. வேல்ஸ் இளவரசர் சார்லஸ். 5. எடின்பரோ கோமகன் - ராணி எலிஸபெத் பவனி. 6. வேல்ஸில் செர்நார்வோன் அரண்மனைத் தோற்றம். இங்குதான் முடிசூட்டு விழா அண்மையில் நடந்தது. □





ஜூலை 1ந் தேதி. அரசி வீற்றிருக்கும் சிம்மாசனத்துக்கு அருகே இளவரசர் சார்லஸ் வந்து மண்டியிட்டு அமர்ந்ததும், ''எனக்குப் பிறகு அரியணையில் அமரும் உரிமை உனக்குத்தான்'' என்று எலிஸபெத் ராணி கூறுவதற்கு அடையாளமாக அரச முத்திரையுடன் கூடிய பதக்கம் அணிவித்தார். பிறகு தங்கக் கிரீடம், வெள்ளி வாள், தங்கச் செங்கோல், தங்க மோதிரம் ஆகியவற்றை சார்லஸுக்கு வழங்கினார் ராணி. இவற்றைப் பெற்றுக்கொண்ட சார்லஸ், வேல்ஸ் இளவரசராக முடிசூட்டப்பட்டார். மண்டியிட்ட நிலையிலேயே மரியாதை செலுத்திப் பிரார்த்தனை செய்தார்.

இந்த முடிசூட்டு விழாவுக்கு நாலாயிரம் பேர்களுக்கு அழைப்பு அனுப்பப் பட்டது. எனினும் முடிசூட்டு விழாவை டெலிவிஷன் மூலம் லட்சோப லட்சம் மக்கள் கண்டு களித்தார்கள். விழாக் கொண்டாட்டங்களுக்காக அரசாங்கம் இரண்டு லட்சம் பவுன்களைச் செலவிட்டது. அரச குடும்பத்தினர் ஊர்வலமாக விழா மாளிகைக்கு அழைத்து வரப்பட்டார்கள். முடிசூட்டிக் கொண்ட சார்லஸ், வேல்ஸ் நாட்டுப் படையினரின் நீலநிறச் சீருடையை அணிந்திருந்தார்.

குடியாட்சிக்கு முன்னோடியாக விளங்கும் பிரிட்டனிலே இந்த முடிசூட்டு விழாவும் நடந்ததில் அதிசயம் ஏதுமில்லை. ஏனெனில் பிரிட்டிஷ் மக்கள் புதுமைப் பிரியர்கள்; ஆனால் பழமைப் பக்தர்கள்! புதிய புதிய முன்னேற்றங்களை ஏற்று உலக நாடுகளிடையே முன்னணியிலேயே நிற்கப் போட்டி போடும் அவர்கள், பழைய சம்பிரதாயங்கள், கோட்பாடுகள், நடைமுறைகள், பண்பாடு முதலியவற்றை இம்மி அளவும் விட்டுக் கொடுக்க மாட்டார்கள்.

வேல்ஸ் இளவரசருக்கு கார்ன்வால் கோமகன், காரிக் பிரபு என்பன போன்ற எட்டு பட்டங்களும் பதவிகளும் உண்டு.

எதிர் காலத்தில் எத்தனையோ பட்டங்களையும் பதவிகளையும் பெறப்போகிற சார்லஸும் மற்ற எத்தனையோ குழந்தைகளைப் போல் 'குவா குவா' என்று சத்தம் போட்டு அழுது கொண்டுதான் பிறந்தான், 1948ம் வருஷம் நவம்பர் மாதம் 14ந் தேதி. அன்று காலையில் தந்தை எடின்பரோ கோமகன் அங்குமிங்கும் கவலையுடன் அலைந்து கொண்டிருந்தார். பக்கிங்ஹாம் அரண்மனை வைத்தியரும் பிரசவம் பார்ப்பதில் நிபுணரான ஒரு டாக்டரும் இரு



# ...வருங்கால மன்னன்!





பத்திரண்டு வயது இளவரசி எலிஸபெத்தைப் பார்வையிட வந்து விட்டார்கள். பக்கிங்ஹாம் அரண்மனை வாயிலில் ஆவலோடு பிரிட்டிஷ் மக்கள் காத்திருந்தனர். வருங்கால மன்னன் பிறந்துவிட்டான் என்று அறிந்ததும் அவர்களுக்கு ஒரே ஆனந்தம். ''குழந்தை பிறந்துவிட்டது!'' என்று செய்தி கிட்டியதும் எடின்பரோ கோமகன் ஓடோடி வந்தார். எலிஸபெத் இளவரசி இன்னும் மயக்க நிலையிலிருந்து விடுபடவில்லை. முதன் முதலில் சார்லஸைப் பார்த்து மகிழ்ந்தவர் தந்தை எடின்பரோ கோமகன்தான்! பிறகு அரசர் ஆறுவது ஜார்ஜும், ராணியும் அரச குடும்பத்தினரும் வந்து எடின்பரோ கோமகனின் கையைக் குலுக்கி மகிழ்ந்தார்கள். இளவரசி மயக்க நிலை தெளிந்ததும் எடின்பரோ கோமகன் ரோஜாப்பூச் செண்டினை மகிழ்ச்சியுடன் வழங்கினார். பட்டத்து இளவரசன் அல்லவா? அரச குடும்பத்தின் மகிழ்ச்சிக்குக் கேட்பானேன்? இந்தச் சந்தோஷச் செய்தி லண்டன் நகர் மேயருக்குச் சம்பிரதாயப்படி முதலில் தெரிவிக்கப்பட்டது. குழந்தைக்கு சார்லஸ் பிலிப் ஆர்தர் ஜார்ஜ் என்று நாமகரணம் செய்தார்கள். சார்லஸ் என்பதே மன்னனின் முக்கிய பெயர்.

அறுநூறு அறைகள் கொண்ட பக்கிங்ஹாம் அரண்மனையில் சார்லஸ் முதல் மாதத்தைத் தன் அன்னையின் படுக்கை அறைக்கு அருகிலுள்ள ஆடை அணியும் அறையில் கழித்தான். ராணி விக்டோரியா காலத்திலிருந்து பயன்படுத்தப்பட்டு வந்த பிரம்புத் தொட்டிலில் சுகமாகப் படுத்துறங்கினான். அவன் அன்னை குழந்தையாக இருந்தபோது உபயோகப்படுத்திய வெள்ளிக் கிலுகிலுப்பையை இவனும் வைத்துக் கொண்டு விளையாடினான்.

சார்லஸுக்காக ஏற்பட்ட நர்ஸரியில் வண்ணப் படங்கள் அடங்கிய புத்தகங்கள், சிப்பாய்ப் பொம்மைகள், வண்ணப் பென்சில்கள் முதலியவை எல்லாம் இருந்தன. இளவரசர் சார்லஸுக்கு மூன்று சக்கர சைக்கிள் உண்டு. பூங்காவைச் சுற்றி வளைய வருவான் சார்லஸ். இளவரசி ஆனே கொஞ்சம் வளர்ந்ததும் சார்லஸுடன் குதிரையேற்றம் கற்றுக் கொண்டாள். அப்போது இளவரசனுக்கு மூன்றரை வயது. இன்று சார்லஸுக்குத் தந்தையைப் போல் போலோ விளையாட்டில் பிரியம் அதிகம்.

சார்லஸுக்குச் சிப்பாய்ப் பொம்மைகளுடன் விளையாடுவதென்றால் கன குஷி. மைதானத்தில் ராணுவ வீரர்கள் நடை போடுவதைக் கண்டு வியப்பான். அதோடு அவர்கள் டிரில் பழகுவது மாதிரியே தானும் செய்து காண்பிக்கவும் செய்வான்.

சார்லஸுக்கு முன்கோபம் உண்டு. இளவரசி ஆனேயுடன் சண்டை பிடிப்பான். பிறகு முதலில் அவனே சமாதானமடைந்து சண்டை தீர மன்னிப்பும் கோருவான்.

அவசியம் நேர்ந்தபோது எதிர்கால மன்னனும்கூட அடிபட நேர்ந்தது. சார்லஸின் தகப்பனார் அவன் அழுகு காண்பிப்பதை ஒரு தடவை கவனித்து விட்டார். உடனே ஓர் அடியும் வைத்து விட்டார். மற்றொரு சமயம் உடனிருந்த துப்பறியும் நிபுணரை 'மிஸ்டர்' என்ற மரியாதை மொழி போட்டு அழைக்கவில்லை என்பதற்காக அரசி சார்லஸை ரொம்பவும் கோபித்துக் கொண்டார்.

இப்படி மன்னன் மகனுனும் மட்டு மரியாதை கற்றுக் கொள்ளுமாறு வளர்க்கப்பட்டான் சார்லஸ். ஐந்தாவது வயதில்



"வந்திருக்கும் பெரியவங்களுக்கு வேலை முடிச்சுவிட்டு உங்க பையனுக்குக் கட்டிங் செய்கிறேன் சார்!"

"அவன் 'ஷேவிங்' என்று கேட்பதற்குள் வேலையை முடித்து விட்டு அனுப்பிவிடு!"

காதரைன் பீபின்ஸ் ஆரம்பக் கல்வியை சார்லஸுக்குப் போதிக்க வந்தாள். சார்லஸின் மரியாதை, பண்பு, அடக்கம் ஆகியவை அவளை மிகவும் கவர்ந்து விட்டன. "அன்புக்குப் பணிவான். ஆனால் கோபித்துக் கத்தினாலோ தனக்குள்ளேயே சுருண்டுவிடுவான். அவனை மீண்டும் சகஜ நிலைக்குக் கொணர்வது மிகக் கஷ்டம். கேலியாகச் சிரித்துப் பேசுவான். பிற்காலத்தில் சார்லஸ் நகைச்சுவைப் பாத்திரங்கள் ஏற்று நடிக்க இதுவே உறுதுணையாயிருந்திருக்கிறது!" என்கிறாள் பீபின்ஸ்.

* * *

சார்லஸுக்கு எட்டு வயதானபோது பிரிட்டிஷ் சரித்திரத்தில் அதுவரை நடந்திராத ஒரு பெரிய சம்பிரதாய மாறுதலைச் செய்ய அரசி எலிஸபெத்தும் அவர் கணவரும் தீர்மானித்தார்கள். இளவரசர் சார்லஸுக்கு அரண்மனையிலேயே படிப்புச் சொல்லிக் கொடுக்காமல் நாட்டிலுள்ள மற்ற பல சிறுவர்களைப் போலவே அவனையும் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவது எனத் தீர்மானித்தனர்.

'ஹில் ஹவுஸ்' என்ற பள்ளியின் தலைமை ஆசிரியர் டவுன்ஸெண்ட் பக்கிங்ஹாம் அரண்மனைக்குத் தேநீர் விருந்துக்கு வரவழைக்கப்பட்டார். அவரோடு உரையாடிய பிறகு சார்லஸை மாணவனாகச் சேர்த்துக் கொள்ளுமாறு அவரை வேண்டினர் அரச தம்பதியினர். இளவரசர் வருகையினால் பள்ளிக்கு அதிக விளம்பரமேற்பட்டு அதனால் மற்ற மாணவர்களின் படிப்புக் கெட்டுவிடுமோ என்று தலைமையாசிரியர் உள்ளூறக் கவலைப்பட்டார். இதையறிந்து ஹில்ஹவுஸ் பள்ளியில் இளவரசர் சார்லஸ் சேருவதைப் பிரபலப்படுத்தாமல் வைத்திருக்க விரும்பினார்கள் எலிஸபெத்தும் எடின்பரோ கோமகனும். ஆகவே பள்ளியின் ஆரம்ப தினங்களில் அவனை அனுப்ப வேண்டாம் என்று முடிவு செய்தனர். ஆனால் விஷயம் தெரிந்து கொண்டு பத்திரிகை நிருபர்களும் புகைப்படக்காரர்களும் ஹில்ஹவுஸ் பள்ளியை முற்றுகையிடத் தொடங்கிவிட்டனர். 1956ம் வருஷம் நவம்பர் 7ந் தேதி, சார்லஸ் தன் பள்ளிச் சீருடைகளை ஓவர்கோட்டில் மறைத்துக்கொண்டு மிஸ் பீபின்ஸோடு அரண்மனையின் சாதாரணக் கார் ஒன்றில் பள்ளிக்குப் பிரயாணமானான்: மாணவர்கள் பலர் பள்ளிக்குள் விரைந்து சென்று கொண்டிருந்தார்கள். சார்லஸ் காரை விட்டு இறங்கிப் பள்ளிக்குள் ஓட முயன்றபோது, புகைப்படக்காரர்கள் அவனை அடையாளம் தெரிந்து கொண்டு பல படங்களை எடுத்து விட்டனர். சார்லஸின் வெல்வெட் காலரோடு கூடிய ஓவர்கோட் அவனை அடையாளம் காட்டி விட்டது! 1954 ஏப்ரலில் 'தி டெய்லர் அண்ட் கட்டர்' பத்திரிகை சார்லஸின் வெல்வெட் காலருடன் கூடிய கோட்டை வர்ணித்து, பதினொரு சிறந்த உடை அணிந்தவர்களுள் ஒருவர் சார்லஸ் என்று விவரித்திருந்தது. ஆகவே பத்திரிகைக்காரர்கள் அவரை 'இனம்' கண்டு கொள்ளக் கேட்கவேண்டுமா?

பத்தி பத்தியாக இளவரசர் பள்ளி செல்வது பற்றிச் செய்திகள் பிரசுரமாயின.

இத்தனைக்கும் பத்திரிகைகளுக்கு அரசியின் சார்பில் இரு வருஷங்கள் முன்பே ஒரு வேண்டுகோள் விடுக்கப்பட்டிருந்தது. அதன்படி இளவரசன் மற்ற எல்லாப் பிள்ளைகளையும் போல் தன் ஆசிரியையுடன் கலைக் கூடங்களுக்கும் தொல்பொருள் கூடங்களுக்கும் சென்று வருவான். அதைப் பெரிதுபடுத்திப் பிரசுரித்துச் சிரமப்படுத்த வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்பட்டது. அப்போது அந்த வேண்டுகோளுக்கு மதிப்புக் கொடுத்த பத்திரிகைகள் இப்போது பிடித்துக் கொண்டன. இளவரசன் சாமான்யமானவன் போல் பள்ளி செல்வது சரியா தவறா என்பது குறித்துக் காரசாரமான விவாதங்கள் நிகழ்ந்தன.

இளவரசன் சார்லஸ் கிரிக்கெட் ஆடக் கற்றுக் கொண்டான். ஹில் ஹவுஸ் பள்ளியில் 'பாக்ஸிங்' கிடையாது. ஆகவே மல்யுத்தத்தை விரும்பிக் கற்றுக் கொண்டான் சார்லஸ். அவனது மிகப் பிடித்தமான விளையாட்டுக்களில் ஒன்று மல்யுத்தம்.

* * *

ஒரு சமயம் ராணி, மகனின் முன்னேற்றம் குறித்து விசாரித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது சார்லஸ் 'அப்பெண்டிஸைட்டிஸ்' ஆபரேஷனுக்குப் பிறகு ஓய்வு பெற்றுக் கொண்டிருந்தார்.

"ஆபரேஷனுக்குப் பிறகு ஓய்வு பெறும் சார்லஸ் பரீட்சைக்கான பாடங்களையெல்லாம் திருப்பிப் பார்த்திருப்பார். ஆனால் கணக்கில் மந்தம்தான்!" என்றார் ஆசிரியர்.

ராணி நகைத்தாள். அவளுக்கும் கணக்குப் போட வராது! அரச பதவிக்கு வருபவர்கள் கணக்குப் போடுவதை விட மக்களை அறியப் பழக வேண்டியதே முக்கியம் என்ற கருத்துடையவள் எலிஸபெத்.

சார்லஸுக்குப் பியானோ வாசிக்கத் தெரியும். வண்ண ஓவியம் தீட்டுவதில் ஆர்வம் அதிகம். பள்ளியின் கலைக்காட்சியில் தமது ஓவி

பங்களை வைத்திருக்கிறார். தச்சுத் தொழிலில் சார்லஸ் கைதேர்ந்தவர். ஓர் அருமையான மேஜையைத் தயாரித்தார். அது இப்பொழுது சகோதரி ஆனேயின் பொக்கிஷமாகத் திகழ்கிறது. நாடக நடிப்பில் குறிப்பாக நகைச்சுவையாக நடிப்பதில் சார்லஸ் சிறந்து விளங்கினார்.

ஃ ஃ ஃ

கார்டான்ஸ்டன் என்ற பள்ளியில் சேர்க்கப்பட்டார் சார்லஸ். உல்லாசப் பயணம் செல்ல அந்தப் பள்ளியில் இரு சிறு கப்பல்கள் உண்டு. அவற்றுள் ஒன்றில் சார்லஸும் அவரது நண்பர்களும் ஸ்டோர்னோவே என்ற ஊருக்கு வந்து சேர்ந்தார்கள். இளவரசர் அந்தக் கப்பலில் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு அவரைப் பார்க்க மக்கள் திரண்டு விட்டார்கள். கிரௌன் ஹோட்டலுக்குள் சார்லஸும் அவரது நண்பர்களும் நுழைந்ததும் மக்கள் அங்கேயும் அவரைக் காண வந்து விட்டார்கள். இளவரசரின் மெய்காப்பாளர் டொனல்ட் கிரீன் சினிமாவுக்கு டிக்கெட் வாங்கப் போயிருந்தார். இளவரசர் சார்லஸ் மக்களுக்கு முன்னால் தாம் காட்சிப்பொருளாக இருக்க விரும்பாமல் ஹோட்டலில் பக்கத்து அறைக்குச் சென்று விட்டார்! அது மது அருந்தும் அறை! என்ன செய்வது? பதினைந்து வயதுப் பையன்கள் மது அருந்த பிரிட்டிஷ் சட்டம் அனுமதிக்கவில்லை என்பது அவருக்குத் தெரியும். ஆயினும், அங்கு மது அருந்தினால்தான் தங்கியிருக்கலாம். வெறுமனே உட்கார்ந்திருத்தல் அழகாயிராது! ஒரு பெண்மணியிடம் போய், 'செர்ரி பிராண்டி கொடு!' என்றார் சார்லஸ். அரை கிரௌனைக் கொடுத்து அதை வாங்கி வைத்துக் கொண்டார். அந்தச் சமயம் பார்த்துப் பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதும் பெண் ஒருத்தி அங்கு வந்து சேர்ந்தாள். கேட்க வேண்டுமா? இளவரசர் சார்லஸ் சட்டத்தை மீறி மது அருந்தினார் என்று நாடெங்கும் ஒன்றுக்குப் பத்தாகப் பரவி விட்டது. பத்திரிகைகள் வாயிலாக. பல கண்டனக் குரல்கள் எழுந்தன.

கார்டான்ஸ்டனில் இளவரசர் சார்லஸ் படித்துக் கொண்டிருக்கும்போது அவர் எழுதிய நோட்டுப் புத்தகம் ஒன்று காணாமல் போய் விட்டது. யாரோ பணம் பண்ணும் நோக்கத்துடன் திருடி விட்டார்கள். இளவரசரின் நோட்டுப் புத்தகம் திருட்டுப் போனதைப் பற்றித் துப்புத் துலக்க ஸ்காட்லாந்து யார்டு துப்பறியும் நிபுணர்களே வந்து விட்டனர். இளவரசர் சார்லஸ் தம் கட்டுரைகள் அடங்கிய நோட்டுப் புத்தகம் ஒன்றைக் கைச் செலவுக்குப் பணமில்லாத காரணத்தால் முப்பது ஷில்லிங்குக்கு விற்று விட்டதாகக் கதை பரவி விட்டது.

ஸ்காட்லாந்து யார்டு துப்பறியும் நிபுணர்கள் நோட்டுப் புத்தகத்தைக் கண்டு பிடித்துக் கைப்பற்றி விட்டனர். ஆனால் அதற்கு முன்பே அதன் பல பக்கங்கள் புகைப்படம் எடுக்கப்பட்டு ஜெர்மனிக்குப் போய் விட்டது! அங்கு ஒரு பத்திரிகை அதை ஏகப்பட்ட பணம் கொடுத்து வாங்கிப் பிரசுரித்தது. "ஓட்டாண்டியான அரசகுமாரன்" என்ற தலைப்பில்!

ஃ ஃ ஃ

சார்லஸ் கேம்பிரிட்ஜில் மூன்று வருஷங்கள் படித்து பி. ஏ. டிகிரி பட்டம் பெறவிருக்கிறார். நான்கு வருஷங்கள் கழித்து எம். ஏ. பட்டதாரியாகி விடுவார். புதை பொருள் ஆராய்ச்சியில் சார்லஸுக்கு அளவு கடந்த ஈடுபாடு.

சார்லஸுக்கு கானன் டாயல் பி. ஜி. வோட்ஹவுஸ் முதலியோர் எழுதிய நாவல்களைப் படிப்பதென்றால் பிடிக்கும்.

ஒரு தர்ம நிதிக்காக கிரிக்கெட் பந்தயம் ஏற்பாடு செய்யப்பட்டபோது அதில் கலந்து கொண்டு சார்லஸ் விளையாடினார். இருபது ரன்கள்தான் எடுத்தார். ஆனால் அதற்குள் ஓர் இளவரசருக்கு இருக்க வேண்டிய வீரத்துடன் இரு பவுண்டரிகளும் ஒரு ஸிக்ஸரும் அடித்தார்.

இதுவரை பிரிட்டனில் அரசாண்டுள்ள மன்னர்கள் பலருக்கும் வருங்கால மன்னர் சார்லஸுக்கும் வளர்ப்பிலும் ஆளான விதத்திலும் ஒரு முக்கிய வித்தியாசம் உண்டு. இளவரசரானாலும் மாணவர் உலகைப் புரிந்து கொள்ளக் கிடைத்த இந்த அரிய வாய்ப்பு அவரது அதிர்ஷ்டம்.



உங்கள் அபிமான பத்திரிகையான கல்கி பலபேர் எடுத்தும் படித்தாலும் புது மெருகு குலையாதிருக்க வசதியாக பிளாஸ்டிக் மேலுறை ஒன்று தயாரித்து அதை சந்தாதாரர்களுக்கு அன்பளிப்பாக வழங்கினோம். ஏராளமான அன்பர்கள் சந்தா அனுப்பி இந்த நல்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டார்கள். ஆனால் நமது கல்கி ஏஜெண்டுகளிடமும் விற்பனையாளர்களிடமும் வாராவாரம் கல்கி இதழ்கள் வாங்கும் கணக்கற்ற அன்பர்கள் இருபது ரூபாய் சந்தா அனுப்ப இயலவில்லை; எனினும் பிளாஸ்டிக் மேலுறை விலை கொடுத்தாவது பெறும் பேராவல் கொண்டிருக்கிறோம் என்று கடிதம் எழுதியவண்ணம் இருக்கிறார்கள். இவர்களின் கோரிக்கைக்கு இசைய இந்தப் பிளாஸ்டிக் மேலுறையை அடக்க விலைக்குத் தர முடிவு செய்திருக்கிறோம். கல்கியின் இஷ்ட தெய்வமான விநாயகரின் அழகிய திருவுருவைத் தாங்கி பொலியும் இந்தப் பிளாஸ்டிக் மேலுறையைப் பெற விரும்புவோர் தபால் செலவு உள்பட ரூ. 2.00 மணியார்டர் மூலம் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். தொகை அனுப்ப வேண்டிய முகவரி : மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-31. உள்ளூர் ஏஜெண்டுகள் மூலமும் ரூ. 2.00 தொகை செலுத்திப் பெறலாம்.

# சுத்தமான
# மனம் கவரும் வெண்மைக்கு




## சிங்கம் மார்க்
## விக்டோரியா
## ப்ளூ ஓ ஓ பி (OOB)
(மிகச் சிறந்த நீலம்)

சிறிதளவே விக்டோரியா ப்ளூ ஓ ஓ பி உபயோகித்ததில் உங்கள் ஆடைகளுக்குத்தான் என்ன வெண்மை! ஆடைகளை பளபளப்பான வெண்மையாக்குகிறது. உங்களுடைய சட்டைகள், வேஷ்டிகள், விரிப்புகள் முதலியவைகளை அதிக வெண்மையுடன் வைக்க இதுவே சிறந்த சிக்கனமான முறை.



தயாரிப்பாளர்கள்: அல்ட்ராமரீன் & பிக்மெண்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர், மதராஸ் 53

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: கெர்டைன் ட்ரேடிங் கம்பெனி, 34 க, லிங்கச் செட்டித் தெரு, மதராஸ் 1,

விநியோகஸ்தர்கள்: மெஸர்ஸ் என். ரமண்லால் பிரதர்ஸ், 416, தங்கசாலைத் தெரு, சென்னை-1



அறிமுகம்:

# குட்டி எம்ஜிஆர்!

**கேள்வி:** உன் பேயர் என்ன?

பதில்: எம். ஜி. ஆர். குட்டி எம். ஜி. ஆர். என்று எல்லோரும் கூப்பிடுவாங்க.

**கேள்வி:** எம். ஜி. ஆரா?

பதில்: மாயூரத்திலே பொறந்தேன். எங்கப்பா பேரு கணபதி ராமன். எம் பேரு ராமச்சந்திரன். அதனால் எம். ஜி. ஆர்.

**கேள்வி:** உனக்கு என்ன வேலே?

பதில்: 'ஐ. ஜி.' வேலே.

**கேள்வி:** அப்படீன்னா?

பதில்: இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆப் போலீஸ்.

**கேள்வி:** நீ என்ன படிச்சிருக்கே?

பதில்: ஐ. பி. எஸ்.

**கேள்வி:** அதாவது....?

பதில்: இந்தியன் போலீஸ் ஸர்வீஸ்.

**கேள்வி:** எம். ஜி. ஆர். பாட்டு ஏதாவது தெரியுமா?

பதில்: 'நான் ஆணையிட்டால்', 'தாய் மேல் ஆணை' இந்த ரெண்டு பாட்டும் ஒவ்வொரு அடி தெரியும்.

**கேள்வி:** உன்னைக் கண்டால் எல்லோருக்கும் பிடிக்குமா?

பதில்: ஓ, பிடிக்குமே! என் உடையைப் பார்த்ததுமே அப்படியே அசந்து போயிடுவாங்க.

**கேள்வி:** வேறே ஏதாவது விசேஷ உடை இருக்கா?

பதில்: நேருஜி உடை, டிராபிக் அதிகாரி உடை, எம். ஜி. ஆர். உடை எல்லாம் இருக்கு.

**கேள்வி:** உனக்கு எத்தனை வயசு?

பதில்: ஐந்தரை!

**கேள்வி:** உனக்கு யாரைக் கண்டால் ரொம்பப் பிடிக்கும்?

பதில்: நிஜம் எம். ஜி. ஆரைக் கண்டால் தான் ரொம்பப் பிடிக்கும்.

**கேள்வி:** நீ ஐ. ஜி. வேலே பார்க்கிறயே ஏதாவது போலீஸ்காரர்களைத் தெரியுமா?

பதில்: தெரியுமே! மாயூரம் கான்ஸ்டபிள்கள் தர்ட்டீன் நயன்டி டு (1392), டுவெல்வ் நயன்டி த்ரீ (1293), டுவெல்வ் டுவென்டி ஸிக்ஸ் (1226) — இப்படி இன்னும் பத்துப் பேர்களைத் தெரியும்.

**கேள்வி:** நீ எப்போதாவது போலீஸ்கிட்டே மாட்டிக்கொண்டது உண்டா?

பதில்: ஒரு தடவை நானும் எங்கப்பாவும் லைட்டில்லாம ராத்திரி எட்டு மணிக்குச் சைக்கிள்ளே போனோம். ஒரு போலீஸ்காரர் எங்களைக் கூப்பிட்டு நிறுத்திக் கிட்ட வந்து என்னைப் பார்த்துட்டு, "யாரு, ஐ. ஜி.யா? நீங்க இப்படி லைட்டு இல்லாமப் போனா நம்ப இலாகாவுக்கே அவமானம்" அப்படின்னு சொல்லிட்டுப் போயிட்டாரு.

**கேள்வி:** சைக்கிளில் யாராவது 'டபிள்ஸ்' போனால் 'சார்ஜ்' செய்வதுண்டா?

பதில்: 'டபிள்ஸ்' என்ன? பஸ் டிரைவரை 'ஓவர் ஸ்பீட்' போனதுக்காக சார்ஜ் பண்ணுவேன். கண்டக்டர்களை 'ஓவர்லோடு' ஏத்தினதுக்காக சார்ஜ் பண்ணுவேன். வண்டிக்காரங்க 'லைட்' இல்லாமப் போனாலும் சரி, நாலு பிரயாணிகளுக்கு மேலே ஏத்தினாலும் சரி 'சார்ஜ்' பண்ணுவேன். சில சமயம் ராத்திரியிலே இந்தப் போலீஸ் உடுப்பை அணிந்து ஒளிஞ்சுகிட்டு போலீஸ் விஸிலே ஊதுவேன். சைக்கிள்ளே டபிள்ஸ் போறவங்க, லைட்டில்லாமப் போறவங்க எல்லாரும் தொப்பு தொப்புன்னு குதிச்சுச் சுத்திச் சுத்திப் பார்த்து முழிப்பாங்க. கொஞ்ச நேரம் கழிச்சு நான் வருவேன். என்னைப் பார்த்துட்டு "நீங்கதானா?" அப்படின்னுட்டுச் சிரிப்பாங்க. "போனாப் போறது. இனிமே இப்படிச் செய்யாதீங்க" அப்படின்னு உத்தரவு போட்டுடுவேன். சிரிச்சுகிட்டே போயிடுவாங்க.

**கேள்வி:** சாலேயோடு போகும்போது ஏதாவது செய்வதுண்டா?

பதில்: மிஸ்டர், ஓரமாப் போ! அம்மா, குழந்தையை அழைச்சுகிட்டு ஓரமாப் போ. அப்படீன்னு விரட்டுவேன். ஒரு சமயம் போலீஸ் அதிகாரி உடுப்பு அணிந்து போகும் போது ஒரு போலீஸ்காரர் டிராபிக் குடையின் கீழே நிற்காமல் அப்பாலே போய் வெத்திலே போட்டுண்டு இருந்தார். நான் சைக்கிளில் போயிண்டே, அவர் நம்பரைச் சொல்லிக் கூப்பிட்டேன். "ஐ. ஜி. வரும்போது ஏன் குடையின் கீழே நிக்கல்லே?" அப்படின்னு ஒரு கேள்வி போட்டேன். அவரும் சிரிச்

கண்டே, 'எஸ் ஸார், இதோ நின்னுடறேன், கோபிச்சுக்காதீங்க' அப்படீன்னார்.

**கேள்வி:** மாயூரம் டவுன் முழுக்க உனக்குத் தெரியுமா?

பதில்: ஓரளவு தெரியும். மேற்கே குத்தாலம் கிழக்கே தர்மபுரம்— கருவாழக்கரை மாரியம்மன் கோயில், வடக்கே, நீடூர். தெற்கே மங்கநல்லூர் வரையிலே தெரியும். சில தெருக்கள்லே நான் போனா எல்லாக் குழந்தைகளும் 'ஐ. ஜி. டாடா! போலீசு டாட்டா!' அப்படீன்னு தலைக்கு ஒண்ணொண்ணு சொல்லிண்டு கையை ஆட்டுவாங்க. வண்டிக்காரங்க என்னைக் கண்டாலே, ''சாமி ஓரமா ஓட்றேங்க. என்னை ஒண்ணும் செஞ்சுடாதீங்க'' அப்படீம்பாங்க.

**கேள்வி:** நீ 'டிராபிக்' குடையின் கீழ் நின்னுண்டு போக்குவரத்தைக் கவனித்தது உண்டா?

பதில்: ஒரு நாளைக்குப் பழைய போஸ்டாபீஸ் (பஸ் ஸ்டாண்டு) கிட்டே இருக்கிற குடை கீழே நின்னுண்டு பஸ், கார், வண்டி எல்லாத்தையும் அப்படிப் போ, இப்படிப் போன்னு சொல்லிண்டு இருந்தேன். அப்ப கும்பகோணத்துலே மாமாங்கம் நடந்து முடிந்து ஏகப்பட்ட கார் வந்துண்டு இருந்தது. ஒவ்வொரு காரிலே இருந்தவங்களும் எங்கிட்டே வந்து நிறுத்தி வேடிக்கை பார்க்க ஆரம்பிச்சுட்டாங்க. அது தவிர குழந்தைகளெல்லாம் வேடிக்கை பார்க்க ஆரம்பிச்சுடுத்து. ஒரே கூட்டமாப் போச்சு. நான் ''டிராபிக்கை'' ஒழுங்குபடுத்தப் போக ஏகப்பட்ட நெருக்கடியாப் போச்சு. நான் போனும் போதும்னு ஆயிடுத்து.

**கேள்வி:** போக்குவரத்துக்கு இடையூறாக இருக்கிற கறிகாய்க் கடை இதர கடைகளை என்ன செய்வாய்?

பதில்: 'கடையெல்லாம் இங்கே போடக் கூடாது. லைசென்ஸ் இருக்கா?' ன்பேன். ''இருக்கு''ன்னுட்டு ஏதாவது ஒரு கடுதாசைக் காட்டுவாங்க. ''யெஸ்'' அப்படின்னுட்டு, ''ராத்திரி பத்து மணிக்கு மேலே ஒரு கடையும் இங்கே இருக்கக் கூடாது'' அப்படீம்பேன். அவாள்ளாம், 'சரி சார்' அப்படீன்னு சிரிச்சுப்பாங்க. ஒன்பது மணிக்கெல்லாம் தான் வியாபாரம் முடிஞ்சு போயிடுமே?

**கேள்வி:** போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் பண்ணுவாயா?

பதில்: ''ஹலோ, போலீஸ் ஸ்டேஷனு? நான்தான் ஐ. ஜி. பேசறேன். இங்கே ஒரே கலாட்டாவா இருக்கு. உடனே ஒரு பத்து போலீஸோடே ஒரு வான் அனுப்பு! க்விக்!''

பேட்டி: **ஸ்ரீவத்ஸன்**

---



# முதல் சந்திப்பு

**தமிழகத் தலைவர்கள் காந்திஜியை முதன் முதலில் எப்படிச் சந்தித்தார்கள்?**

## 1. காந்திஜியும் வ. வே. சு. அய்யரும்

''மனித சிருஷ்டியில் உயர்ந்தவரும் ஒப்பற்றவருமான ஒருவரை இன்று சந்தித்தேன்'' என்று அளவற்ற மகிழ்ச்சியுடன் கூறினார் வ. வே. சு. அய்யர். சொன்ன இடம் லண்டனில். சொன்னது டி. எஸ். எஸ். ராஜனிடம்.

''அவர் சாதாரண மனிதரல்ல. அவருடன் பேசப் பேச என் மனம் அவரிடமே ஈடுபட்டு விட்டது. என்ன அன்பு! என்ன மரியாதை! என்ன தேச பக்தி! என்ன உண்மை! சொல்லி முடியாது'' என்று அய்யர் அடுக்கிக் கொண்டே போனார்.

□ □ □ □ □ □ □ □ □ □ □

மறு நாள் அய்யர் தம்முடன் (வீர) சாவர்க்காரையும் அழைத்துச் சென்றார். நான்கு நாட்கள் வாதாடியும் புரட்சி சதியாலோசனை இவைகளுக்கான ஆதரவை அவர்கள் காந்திஜியிடமிருந்து பெற முடியவில்லை. 'அஹிம்சை மூலம் அரசியல் துறையில் வெற்றி பெற்று விடலாம் என்று காந்திஜி சாதிப்பதை என்னால் ஏற்க முடியவில்லை' என்று வ. வே. சு. அய்யர் கூறினார்.

பின்னும் பெல்காம் காங்கிரஸில் காந்திஜி தலைமை வகித்த போது வ. வே. சு. அய்யர் அவரைக் காண நேர்ந்தது. அப்போது அய்யர் மனம் மாறித் துப்பாக்கியை வீசி எறிந்து விட்டுத் தக்ளியைத் தம் கையில் எடுத்துக் கொண்டார்.

— ''ரஜன்''



# சியாமளாவின் சாதனை



அண்மையில் வெளியாகியுள்ள ஐ.ஏ.எஸ். பரீட்சை முடிவுகளைப் பாருங்கள். தேர்வு பெற்றவர்களின் பட்டியலில், அனைத்து இந்தியாவிலும் முதல் இடத்தைப் பெற்றிருப்பவர் ஒரு பெண்! நாகபுரி பல்கலைக் கழகத்தில் பயின்று பௌதிகத்தில் எம். எஸ்ஸி. பட்டம் பெற்றுள்ள குமாரி சியாமளா பாலசுப்பிரமணியன் இப்பெருமைக்குரியவர். தமிழகத்திலுள்ள பல்கலைக் கழகம் எதற்கும் இப்பெருமை கிட்டவில்லையே என்று நாம் குறைப்பட்டுக் கொள்ளும் அதே நேரத்தில், குமாரி சியாமளா நாகபுரி பல்கலைக் கழகத்தில் உயர் கல்வி பயின்ற போதிலும், தமிழ் நாட்டை (தஞ்சை மாவட்டம்)ச் சார்ந்தவர் தானே என்பதில் பெருமை அடைகிறோம்.

எட்டரை வயதில்தான் பள்ளியில் சேர்ந்தான் என்றாலும் சியாமளா எடுத்த எடுப்பிலேயே ஏழாவது வகுப்பில் சேர்க்கப்பட்டாள்! அந்த அளவுக்கு அவள் அறிவு அவ்வயதிலேயே விருத்தி அடைந்திருந்தது.

சென்னை ரோஸரி மெட்ரிகுலேஷன் பள்ளியில் பத்தாவது படிவம் வரை படித்த சியாமளா, சென்னைப் பல்கலைக் கழக விதிகளின்படி 1960ல் மெட்ரிகுலேஷன் பரீட்சை எழுத முடியவில்லை. 1946ல் பிறந்த செல்வி சியாமளா, 1960ல் பரீட்சை எழுதுவதற்குரிய குறைந்தபட்ச வயதை எய்தவில்லை. ஓராண்டு காலத்தை வீணடிக்க விரும்பாமல், மயிலை ஆந்திர மஹிள சபா மூலம் 1960ல் பனாரஸ் மெட்ரிகுலேஷன் தேர்வு எழுதி வெற்றி பெற்றார்.

ஆயிரக்கணக்கானவர்கள் பரீட்சை எழுதினார்கள். அவர்களில் சியாமளா ஆறாவதாக விளங்கினார். முதலாவதாகவே வந்திருக்க முடியும். ஆனால் இதில் ஒரு சங்கடம் இருந்தது. பனாரஸ் மெட்ரிக் என்றால் ஹிந்திப் பரீட்சை உண்டு. சியாமளா அதுவரை ஹிந்தி படித்ததில்லை. ஆனாலும் என்ன? சியாமளாவுக்கு அது ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. மளமள வென்று மெட்ரிக் பரீட்சை எழுதுமளவுக்கு ஹிந்தியைக் கற்றுத் தேறினாள்.

குமாரி சியாமளாவுக்குப் பரீட்சைகள் எழுதி முதன்மையாகத் தேர்வு பெறுவது கரும்பு கடிப்பது போல் இனிக்கிறது. சீதாபாய் கலைக் கல்லூரி (நாகபுரி பல்கலைக் கழகம்)யில் பி.யு.சி.யும் பி.எஸ்ஸி.யும் பயின்று அதிலும் முதன்மையாகத் தேர்வு பெற்றதுடன், ஆறு தங்கப் பதக்கங்களும், மூன்று பரிசுகளும் பெற்றுள்ளார். பி. எஸ்ஸி. முதல் ஆண்டுத் தேர்வில் மட்டும் ஐந்து பரிசுகள் கிடைத்தன. எம். எஸ்ஸி.யிலும் இரு தங்கப் பதக்கங்கள் கிடைத்தன. நாகபுரி பல்கலைக் கழகத்தின் வரலாற்றிலேயே பி.எஸ்ஸி., எம்.எஸ்ஸி. பட்டப் பரீட்சைகளில் மிகவும் அதிகமான மொத்த மார்க்குகள் பெற்று ஒரு 'ரெகார்டு' ஏற்படுத்தியுள்ளார், செல்வி சியாமளா. 1961 முதல் 1966 வரை குமாரி சியாமளா எழுதிய தேர்வுகள் ஒவ்வொன்றிலும் முதல் ஸ்தானம் (Rank) அவருக்கே கிடைத்தது. பாரத அணுசக்தி கமிஷன் சியாமளாவின் தகுதி கண்டு ஐந்து ஆண்டுகள் பி. எஸ்ஸி., எம். எஸ்ஸி. படிக்க உபகாரச் சம்பளம் வழங்கியது. ஐ.ஏ.எஸ். தேர்வில் இவருக்கு முதல் ஸ்தானம் கிடைத்தது ஏதோ தற்செயலாக நிகழ்ந்ததன்று. உழைப்பின் பலன்தான்.

எம். எஸ்ஸி. பரீட்சை எழுதித் தேர்வு பெற்ற அதே வருடம் ஐ. ஏ. எஸ். பரீட்சை எழுத முடியவில்லை அவரால். மீண்டும் வயதுப் பிரச்னை குறுக்கிட்டது. இரண்டு



வருடங்கள் காத்திருந்து 1968ல்தான் ஐ. ஏ. எஸ். பரீட்சை எழுத முடிந்தது. இடைப்பட்ட இரு ஆண்டுகளும் அவர் படித்த அதே சீதாபாய் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றினர்.

விஞ்ஞானம் படித்துச் சிறப்பாகத் தேர்வு பெற்ற சியாமளா விஞ்ஞானத் துறையில் மேலும் தொடர்ந்து ஆராய்ச்சியில் ஈடுபட்டு 'டாக்டர்' (Ph. D.) பட்டம் பெற்றிருக்கலாம் அல்லவா ? அதற்குப் பதில் ஐ.ஏ.எஸ். பரீட்சை எழுதுவானேன் ? பௌதிகம், கணிதம் இவற்றில் சியாமளாவுக்கு ஆர்வம் இருந்தாலும் அந்தத் துறைகளில் மட்டுமே அவர் மனம் ஈடுபட்டது என்று சொல்ல முடியாது. பல துறைகளிலும் விஷய ஞானம் பெற அவர் உள்ளம் விழைந்தது. ஐ.ஏ.எஸ். பரீட்சை எழுதி வெற்றி பெற வேண்டும் என்பது சியாமளாவின் நெடுநாளைய விருப்பம். ஐ. எஃப். எஸ். (Indian Foreign Service) இல் சேர்ந்து அயல்நாடுகளில் பணியாற்ற முடிவு செய்திருக்கிறார்.

அரசாங்க உத்தியோகம் மகளிர்க்குச் சற்றுச் சிரமமாக இருக்குமே? மற்ற பெண்கள் இது பற்றி என்ன நினைக்கிறார்களோ — ஆனால், சியாமளாவைப் பொறுத்த மட்டில், அதில் உள்ள சிரமங்கள் அவருக்குப் பொருட்டல்ல. பயந்து ஒதுங்கத் தயாரில்லை, அவர். சிறந்த நிர்வாகியாக விளங்குவதென்பது அவரவரது சொந்தத் திறமைகளைப் பொறுத்த விஷயம் என்கிறார் தீர்மானமாக.

சியாமளாவின் பொழுது போக்கு என்ன?

சென்னையில் உள்ள அவரது சித்தப்பா திரு டி. சந்தானம் கூறுகிறார்: "சியாமளாவின் பொழுதுபோக்கு படிப்புத்தான். ராமாயணம், ஓட்ஹௌஸ் நவீனங்கள், பத்திரிகைகள் எல்லாம் படிப்பாள். மராத்தி மொழி நன்றாகப் பேசுவாள். சிநேகிதிகள் வீட்டுக்கு வந்தால் வாய் ஓயாமல் பேசிக் கொண்டிருப்பாள். விளையாடுவதில் அவளுக்கு ஆர்வமில்லை. ஆனால் விளையாட்டுக்களில் ஈடுபாடு உண்டு. கிரிக்கெட், டென்னிஸ், பாட்மிண்டன் முதலிய பல ஆட்டங்களில் எந்தெந்த ஆண்டில் எந்தெந்த விளையாட்டு வீரர்கள் எத்தனை எத்தனை எண்ணிக்கை எடுத்தார்கள் என்பதெல்லாம் அவளுக்கு அத்துப்படி. கட்டுரைகள் எழுதுவதில் அவளுக்கு ஆர்வம் அதிகம். 'சங்கர்ஸ் வீக்லி' பத்திரிகை ஆண்டுதோறும் நடத்தும் அகில உலகக் கட்டுரைப் போட்டியில் தொடர்ந்து பல ஆண்டுகள் பரிசு வாங்கியிருக்கிறாள். பரிசுப் பொருள்கள் வீட்டில் குவிந்து கிடக்கின்றன. 1958ல் நிகழ்ந்த போட்டிக்கு வந்திருந்த 5000 கட்டுரைகளுள் சியாமளாவின் கட்டுரையே மிகச் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பாரத ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் நேருஜியினால் வழங்கப்பட்டது. இதையொட்டி அகோலா ரோட்டரி சங்கம் சியாமளாவைப் பாராட்டியது. பதின்மூன்று வயதான சியாமளா அன்று ரோட்டரி சங்கத்தில் பேசினாள். இந்த இளம் வயதில் ரோட்டரி சங்கத்தில் பேசும் வாய்ப்பு பெற்ற நபர் வேறு ஒருவர் இருந்திருக்கிறாரா என்பது சந்தேகம்."

பிர்லா நிறுவனம் ஒன்றில் அகோலாவில் பணியாற்றும் திரு டி. பாலசுப்பிரமணியவின் ஆசைக்கு ஒரு பெண் சியாமளா. ஆண்டிக்கு ஒரு பையனும் உண்டு.

தந்தை மகளைப் பற்றிக் கூறுகிறார்:

"பனாரஸ் மெட்ரிக் முடிந்ததும் சியாமளாவைக் கல்லூரியில் சேர்க்க அழைத்துப் போனேன். கல்லூரி முதல்வர் இவளுக்கு இடம் அளிக்க முதலில் தயங்கினர். பெண்கள் சாதாரணமாக விஞ்ஞானப் பாடங்களில் சோபிப்பதில்லை என்றார். நான் சொன்னேன், 'சியாமளா உங்கள் கல்லூரிக்கு ஒரு பெரிய சொத்தாகத் திகழ்வாள்' என்று.

"பிறிதொரு நாள் பட்டமளிப்பு விழாவின் போது இவளை அதே கல்லூரி முதல்வர் நாக்பூர் பல்கலைக் கழக வேந்தருக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டியிருந்தது. ஒவ்வொரு பரிசாக அவள் பெற்று வருகையில், சியாமளா கைகள் கொள்ளாத அளவுக்குப் பரிசுகளை அந்த விழாவின்போது பெற்றுக் கொண்டே இருப்பதைப் பார்த்துக் கல்லூரி முதல்வர் பெருமிதமும் மகிழ்ச்சியும் மீதுறத் திக்குமுக்காடிப் போனார்." — 'பாணன்'



## ஸாக்ரடீஸ் கல்யாணம்!

ஸாக்ரடீஸ் கல்யாணம் என்ற தலைப்பிலே ஒரு சினிமா தயாராகி வருகிறது. ஆமாம், நீங்கள் நினைப்பது சரிதான்.

அமெரிக்க ஜனாதிபதியின் மனைவியாகத் திகழ்ந்து பின்னர் ஸாக்ரடீஸ் ஓனஸிஸ் என்ற கோடீசுவரனை மணந்து கொண்ட ஜாக்குலினின் கதையைத்தான் சினிமாவாக எடுக்கிறார்கள்.

யுகோஸ்லாவிய தயாரிப்பான இந்தப் படத்தில் அயல்நாட்டு நடிகர்களும் இடம் பெறுவார்கள்.

கதையில், வயதான கோடீசுவரன் ஒருவன், ராஜா சுட்டுக் கொல்லப்பட்டதால் விதவையான யௌவனம் பிராயத்து ராணியைத் திருமணம் செய்து கொள்கிறான். -நன்றி: யுகோஸ்லாவ் ரெவ்யு

# உழைப்பாளர் சிலை உயிர் பெற்றால்..?

□ "காந்தியின் உபதேசங்களை மறந்துவிட்டு காந்திக்குச் சிலை வைத்ததைப் போல், உழைப்பை மறந்து விட்டதால்தான் எங்களுக்கும் சிலை வைத்து விட்டார்களோ ?"
— வெண்ணிலா, சென்னை-61

● "உழைக்கும் கரங்களே, நாட்டை உருவாக்கும் கரங்களே, உங்களை அரசியல்வாதிகளின் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளுங்கள் !"
— கே. அசோக்குமார், சேலம்-5

□ "லாட்டரியில் விழுகப் பணத்தைப் போடாமல் எங்களை மாதிரி உழைத்துச் சம்பாதிக்க முயலுங்கள்."
— வி. கண்ணன், பத்தை

● "இதுவரை வேலையிருந்தும்னு என்னன்னே அறியாத உழைப்பாளிங்க நாங்கதான் !"
- கே. வி. புஷ்பவல்லி, சென்னை-5

□ "அடேயப்பா, நகர்த்த முடியல்லியே, சரியான பளு !"
"ஆமாம், ஆமாம்! நம்ம சர்க்காருடைய வெளிநாட்டுக் கடன் சுமையைப் போல் தாங்க முடியாத பளுதான் !"
"அதை விடு, நம்ம அரசாங்கம் நம்ம மேலே சுமத்தி இருக்கிற வரிச் சுமையைப் போல் பளுன்னு சொல்லு!"
"அண்ணே, ரொம்பச் சரியாச் சொல் விட்டே, போ !"
— லதா ஸ்ரீனிவாஸ், நெய்வேலி-1

● "நாம் இத்தனை நாள் வேலை செய்ததற்கு யார் கூலி கொடுப்பாங்க ?"
"இத்தனை நாளும் நாமென்ன வேலையா செய்தோம்...... ?"
- அன்பு ஏ.ஜெகசங்கர், தம்மம்பட்டி

□ "க்ரேனை (பளு தூக்கி)க் கொண்டு வந்தால் வேலை ஒரு நொடியில் முடிஞ்சுடும். அதை விட்டுட்டு...."
— ரா. நளபதி, வைத்தியநாதபுரம்

● "இந்த இடத்திலேயிருந்து நம்ம இறங்கிட்டா இந்த இடத்திலே சிலை வைக்க யாருப்பா பாக்கி இருக்காங்க ?"
- எஸ். வெங்கடராமன், சென்னை-11

□ "வேலையில்லாத் திண்டாட்டத்தில் எம்மையும் சிக்க வைக்க நினைக்கிறீரோ?

கற்றோம், தொழிலைத் திறனோடு. தற்போது கட்டுவோம், பொருளினை முறையோடு !"
— ஜெ. குப்புராஜ், சென்னை-12

● "உண்மையான உழைக்கிற உழைப்பாளிகளுக்குத் தகுந்த கூலி கிடைக்கும். பலனை எதிர்பாராமல் இத்தனை நாள் உழைத்த நமக்குக்



கடவுள் சிலை மதிக்க முடியாத கூலியான உயிரைக் கொடுத்திருக்கார்."
— அ. இலட்சுமணனாம், மதுரை-1

□ "தானத்தான தம்பிரான்
தடியைவிட்டு நெம்புறான்
ஆளைபட்டும் பார்க்குறான்
அசையமாட்டேனென்குதே !"
— கிரிஜா தேவி: திருச்சி



● "உழைப்பு, அதன் பெருமைங்கிறதெல்லாம் வெறும் சிலை வடிவிலேதான் இருக்குது....!"

— ச. சங்கரநாராயணன், சென்னை-4

□ "நாங்கள் உயர்ந்தது உழைப்பாலல்ல; உளியால் !"

— சந்திரவாணன், கரூர்

● "நாம் சிலையாக இருந்த போதுதான் நம்மை மதித்தார்கள். இப்போது எங்கே மதிக்கப் போகிறார்கள் ?"

எஸ். ஜெயசக்திவேல், பறக்கை

□ "கடவுளே! நாங்க எப்போ மறுபடியும் சிலையாவோம் !"

— ஜெயசங்கர், பாளையங்கோட்டை







உழைப்பாளர் சிலை 'உயிர் பெற்றால்?' என்ன பேசும் என்று வாசக நேயர்களைக் கேட்டோம். ஆயிரக் கணக்கான அன்பர்கள் தங்கள் தங்கள் எண்ணங்களை எழுத்தில் வடித்தனுப்பினார்கள். அவற்றில் சிறந்தவற்றை இங்கே கொடுத்திருக்கிறோம். இவற்றை எழுதியவர்கள் ஒவ்வொருவரும் ரூபாய் ஐந்து பரிசு பெறுகிறார்கள்.



# தீராத விளையாட்டு

## கு. அழகிரிசாமி

விஜயாவைப் பற்றி அருணாசல முதலியார் பல சந்தேகங்களைக் கிளப்பினாரல்லவா? அதையெல்லாம் நடராஜ முதலியார் வாயைத் திறக்காமல் கேட்டுக் கொண்டிருந்தார்.

அருணாசல முதலியார் சொன்னார்: ''அண்ணியும் கூட இதைப் பார்த்துக்கிட்டிருக்காங்களே என்கிறது தான் எனக்கு ஆச்சரியமாக இருக்கு...இந்தச் சமாசாரத்தைத் தங்கம் என்கிட்டச் சொன்னதிலிருந்தே எனக்கு மனசு சரியில்லே. ராஜா எப்போ பார்த்தாலும் இந்தப் பொண்ணைப் பத்தித் தான் தங்கம்கிட்டே பேசுவானாம்! தடுத்துச் சொன்னால் கோபப்படுறானாம்! என்னாலே நம்பவே முடியல்லே. தங்கத்து மேலே ராஜாவுக்குக் கோபம் வரணும்னா அவனுக்கு அந்தப் பெண் கிட்டே எவ்வளவு மயக்கம் இருக்கணும்! அண்ணாச்சி, இதை முத்த விடக் கூடாது. நான் சொல்றேன்...''

நடராஜ முதலியார் நிமிர்ந்து பார்த்து, ''அருணாசலம்! இந்தப் பொண்ணு வீட்டுக்கும் ராஜா ஒரு நாள் போயிட்டு வந்தானாம்'' என்றார்.

தம்பி திடுக்கிட்டுப் போனவர் போல் ''தேடியும் போயிட்டானா? அப்படியா கதை...? ஆமா, இதை நீங்க என்கிட்டே சொல்றீங்களே, அவனை ஒரு வார்த்தை ஏன் தடுத்துச் சொல்லியிருக்கக் கூடாது?'' என்று கேட்டார்.

நடராஜ முதலியாருக்குக் கண்ணில் நீர் துளித்தது. ''அருணாசலம்! நான் புத்தி சொல்றப்லே அவன் ஆயிட்டான்னு என்னாலே நினைக்கவே முடியல்லே. அவன் தப்புச் செய்வான்னு என் மனசு ஒப்புக் கொள்ளவே ஒப்புக் கொள்ளாது....''

''நீங்க ஒப்புக் கொள்ளா விட்டாலும் நடக்கிறது தப்புத்தானே? இல்லே, சரியான காரியம்னு நீங்க நெனைக்கிறீங்களா?''

''என்னை என்ன சொல்லச்சொல்றே? ராஜாவைக் கூப்பிட்டுப் புத்தி சொல்ல எனக்கு வாய் வரவே வராது. அவன் எனக்குப் பிள்ளைதான்; நான் அவனுக்குத் தகப்பன்தான். ஆனா, குணத்திலே அவன் தெய்வமா இருக்கிறான், அருணாசலம்...''

''நீங்க சொல்ல வேண்டாம். அண்ணி சொல்லட்டும்.''

''அருணாசலம்! உன் அண்ணிக்கு நாம்ப இப்படிப் பேசிக்கிறதுகூடத் தெரியக் கூடாது. அவளாலே இதைத் தாங்கவே முடியாது.... நீ சொல்லு. அவனைச் சாத்தூருக்குக் கூட்டிக்கிட்டுப் போய்ப் புத்தி சொல்லு. நீதான் சொல்ல முடியும்'' என்றார் நடராஜ முதலியார்.

''அது சொல்லத்தான் போறேன். எனக்கும் அவன் பிள்ளைதான்'' என்று தம்பி சொன்னதும், நடராஜ முதலியார் இந்த விஷயத்தைப் பற்றி மேற்கொண்டு பேச இஷ்டமில்லாமல் எழுந்து விட்டார்.

''நம்ப வீடுகளிலே பெண்கள் ஒரு காலத்திலேயும் ஓர் ஆம்பிள்ளை கூடப் பேச விட்டது கிடையாது. இப்போ காலம் மாறிட்டதுன்னே வச்சிக்குவோம். அதுக்காக?... இல்லே, அவங்களும் நாம்பளும் ஒரு சாதி, ஒரு இனம் ஒரு கிளை வகைன்னு இருந்தாலும் பரவாயில்லே. கல்யாணத்தையாவது பண்ணி வைக்கலாம் — அதுக்கும் அவங்க தாய் தகப்பன் சம்மதிக்கணும் — ஆனால் இது எந்த வகையிலும் ஒட்டாத குலம் கோத்திரங்களாக இருக்கே! இதிலே என்ன உறவும் சிநேகமும் வேண்டியிருக்கு?'' என்றார் தம்பி.

''போதும் அருணாசலம், நான் சொன்னபடியே செய். சாத்தூருக்கு ராஜாவைக் கூட்டிக்கிட்டுப் போ. என்கிட்டே பேசாதே. என்னாலே தாங்க முடியாது. மனசு ரொம்பக் கஷ்டமாயிருக்கு.''

''நானும் மனக் கஷ்டத்தோடே தான் வந்தேன். உங்க கிட்டே எப்படிப் பேசறதுன்னே யோசனை பண்ணிக்கிட்டிருந்தேன். கடைசியிலே, இந்தப் பொண்ணைப் பார்த்ததும் எனக்கு ஆங்காரம் வந்துட்டது. அண்ணாச்சி, ராஜாவுக்கும் வயசு இருபத்தஞ்சாச்சு. தாமசம் பண்ணவே கூடாது. நெருப்பும் பஞ்சும் கிட்ட வந்த பிறகும்

# 'ஆஸ்ப்ரோ'
# மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிக்கோலஸ் (N) தயாரிப்பு

AG.37.TAM

நாம்ப சும்மா இருக்க முடியாது. இனி அடுத்த வேலை அதுதான்...''

அருணாசல முதலியாரும் இடத்தை விட்டு எழுந்தார், தீர்மானமான முடிவோடு. நடராஜ முதலியாரிடம் பல தடவைகள் சொல்லிப் பார்த்தும், அவர் பிடி கொடுக்காதது கண்டு, தாமே விஜயா - ரங்கராஜனின் நட்பை முறிக்க நடவடிக்கை எடுக்கத் திட்டமிட்டார் அருணாசல முதலியார். தம் எண்ணத்தைச் செயலாக்கும் வரையில் அவருக்குத் தூக்கம் வருமா?

## அத்தியாயம் 19

ரங்கராஜன் சென்னைக்குப் போய்ச் சேர்ந்ததும் ஹைகோர்ட்டுக்குப் பக்கத்திலே ஒரு லாட்ஜில் அறை அமர்த்தித் தங்கினான். அன்றிரவே மதுரைக்குத் திரும்ப வேண்டும் என்பதற்காக வந்த காரியத்தை முதலில் கவனித்தான். வக்கீல் சன்னத்தை வாங்கிக் கொண்டு லாட்ஜுக்கே திரும்பி வந்தான். வெகு காலத்துக்குப் பிறகு சென்னைக்கு வந்து, வந்த காரியத்தைப் பார்த்துக் கொண்டதோடு ஊருக்குத் திரும்பி விட வேண்டுமா என்று யோசித்தான். சென்னையில் இரண்டொரு நண்பர்களையாவது போய்ப் பார்த்து, அவர்களோடும் தன் எதிர்காலத்தைப் பற்றிப் பேசி ஆலோசனை பெற்றுச் செல்லலாமே என்று அவனுக்குத் தோன்றியது. அப்போது அவனுக்கு இருந்த மன நிலையில், கடைத் தெருவுக்குப் போய்ப் புது மாதிரி கடிகாரம், புதுத் தினுசான துணிகள் போன்றவற்றை வாங்கவோ, நாட்டியம், நாடகம் போன்ற கலை நிகழ்ச்சிகளைக் கண்டு களிக்கவோ சிந்தனை எழவில்லை.

பிரயாணக் களைப்பு நீங்கப் பிற்பகலில் சிறிது தூங்கிவிட்டு, ஐந்து மணிக்கு மேல் அவன் ஒரு டாக்ஸியைப் பிடித்துக் கொண்டு திருவல்லிக்கேணிக்குப் போனான். அவனோடு வக்கீலுக்குப் படித்த ஒரு நண்பன் அங்கு இருந்தான். சென்னையிலுள்ள மற்ற நண்பர்களை விட இந்தத் திருவல்லிக்கேணி நண்பனுடன்தான் அவன் முன்பு நெருங்கிப் பழகியிருக்கிறான். அதனால் அவனைத் தேடிச் சென்றான். சந்தர்ப்பவசமாக அவனும் வீட்டில் இருந்தான்.

''நமஸ்காரம், ராஜகோபாலன்!''

ரங்கராஜனைக் கண்டதும் அவன் ஆச்சரியத்தினால் எழுந்து நின்று, ''அடேடே! ரங்கராஜனா?'' என்று சொல்லி ஓடி வந்து அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டான். அந்த நிலையிலேயே அவனை அருமை பெருமையாக உள்ளே அழைத்துச் சென்று அமரச் செய்து, தன் தாயார், மனைவி, மக்கள் முதலிய அனைவரையும் அழைத்துத் தன் சந்தோஷத்தைப் பகிர்ந்துகொள்ளச் செய்தான்.

''எவ்வளவு காலமாச்சு, உன்னைப் பார்த்து? சௌக்கியமா? எப்போ வந்தே? ஊரிலே அம்மா அப்பா சௌக்கியந்தானே?... இப்போ என்ன செய்யறே? கல்யாணம் ஆயிட்டுதா?'' என்று கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனான் ராஜகோபாலன்.

''கல்யாணம் உனக்குத் தெரியாமலா ஆகியிருக்கும்?...''

''யார் கண்டது? மதுரையிலே இருக்கிற மிராசுதாருக்கு, மெட்ராஸிலே கோர்ட்டுக்கும் வீட்டுக்கும் கறுப்புக் கோட்டோட அலைஞ்சிக்கிட்டிருக்கிற ஒருத்தனை ஞாபகம் இருக்குமா என்ன?''

''ஞாபகமில்லாமலா தேடி வந்திருக்கிறேன்?'' என்று கேட்டான் ரங்கராஜன்.

''அது சரி, நீ இங்கே படிக்கிறப்பவே மாப்பிள்ளை மாதிரி இருப்பியே! உன்னை மாப்பிள்ளைன்னே கேலி பண்ணுவோம், ஞாபகம் இருக்கா? அப்புறம் இவ்வளவு காலமும் எப்படிக் கல்யாணம் பண்ணிக்காமல் இருக்கிறே? எப்படி இருக்க முடியறது?''

''ஏன் முடியாது?''

''அட..., உனக்கு முடியுமப்பா! நீ இருப்பே. ஆனால், பொண்ணைப் பெத்தவன் உன்னை ஒண்டிக் கட்டையா இருக்க விட மாட்டானே! ஒவ்வொருத்தன் அஞ்சு ஆறுன்னு பொண்ணைப் பெத்து வச்சுக்கிட்டு மூலைக்கு மூலை வலை விசிக்கிட்டிருக்கிறானே!''

''எனக்கு அப்படி ஒண்ணும் கிராக்கி வரலியே!... அது இருக்கட்டும், நான் மெட்ராஸுக்கு இன்னிக்குக் காலையிலே ஒரு காரியமா வந்தேன். அது சம்பந்தமா உன்கிட்ட கொஞ்சம் பேசிட்டுப் போகணும்னு உன்னை அவசரமாத் தேடி வந்திருக்கிறேன்'' என்றான் ரங்கராஜன்.

''அவசரம் என்ன அவசரம்?'' என்று ராஜகோபாலன் கேட்டான்.

''இன்னிக்கு ராத்திரியே நான் மதுரைக்குத் திரும்பணும். அதுதான் அவசரம்.''



## 'பையனைக் காத்த பூனை !

இந்தப் பூனையைச் சர்வ சாதாரணமாகக் கருதி விடாதீர்கள். இப்பொழுது பையனின் மடியில் பரம சாதுவாக இது உட்கார்ந்து கொண்டிருப்பதால் பரம சாது மாதிரி தோன்றுகிறது. அவ்வளவுதான்; உண்மையில் இந்தப் பையனின் உயிரையே மீட்டுக் கொடுத்த "குட்டிகை" அது. ஐந்தடி ஆழமுள்ள குட்டையில் விழுந்துவிட்டான் பையன். தண்ணீரில் மூழ்கி இறந்திருக்க வேண்டியவன் அவன். ஆனால் நல்ல வேளையாக அருகில் இருந்த இந்தப் பூனை 'மியாவ் மியாவ்' என்று கூச்சல் போட்டுப் பையனின் தாயாரைக் குட்டைக்கு ஓடி வரச் செய்துவிட்டது! குட்டையில் விழுந்த மகனை அம்மா மேலே தூக்கி விட்டாள். பையனின் வீட்டில் இப்போதெல்லாம் ராஜோபசாரம்தான் இந்தப் பூனைக்கு! -பூ.பி.என்

மேலே உள்ள புகைப்படத்தை வேறு எப்படி எடுக்கலாம்? (54ம் பக்கம் பார்க்க)

---

"ஏன் அப்படி? ஊரிலே அவசரமா கவனிக்க வேண்டிய வேலை இருக்கா? இவ்வளவு காலம் கழிச்சு மெட்ராசுக்கு வந்துட்டு, ஊரிலே அவசர வேலையை முடிச்சிட்டே வந்திருக்கப் படாதோ?"

"அப்படி ஒண்ணும் அங்கே வேலை இல்லே. இன்னிக்கே திரும்பிடறதாச் சொல்லிட்டு வந்தேன். போகலேன்னா, அவங்களுக்குத் திகைப்பா யிருக்கும்."

"ஏன் திகைக்கணும்? நீ என்ன கைக் குழந்தையா?... போகலாம், பேசாமல் இரு. டிக்கெட் ஒண்ணும் ரிஸர்வ் பண்ணலையே!"

"இல்லே."

"ரிஸர்வ் பண்ணல்லேன்னு ரயிலிலே இடம் கிடைக்காதே."

"முதல் வகுப்பிலேயாவது போகணும். வரும்போதும் முதல் வகுப்பிலேதான் அப்பா அனுப்பி வச்சார்."

"ஒரு நாள் மெட்ராஸிலே கூட இருந்து விட்டதாலே அப்பா கஷ்டப் பட்டுட மாட்டார். ஒவ்வொருத்தன் பிள்ளைகளை — ஏன் பெண்களைக் கூட அமெரிக்காவுக்கும் இங்கிலாந்துக்கும் தனியா அனுப்பிட்டுக் கவலையில்லாமல் இருக்கிறான். நீ என்னடான்னு இந்த மாதிரி சொல்லறே!"

கடைசியில் ரங்கராஜனை அன்று சென்னையில் தங்கும்படி செய்துவிட்டான் ராஜகோபாலன். ரங்கராஜனுக்கும் கூடத் தங்க வேண்டும் என்று தோன்றி விட்டது.

இருவரும் கடற்கரைக்குப் போனார்கள். சுகமான காற்றும், எல்லையற்ற நீர்ப் பரப்பும், நீண்டு பரவி யிருந்த மணற்பரப்பும் ரங்கராஜனுடைய உள்ளத்தில் ஓர் எக்களிப்பை உண்டு பண்ணின. அவன் மனம் இலவம் பஞ்சு மாதிரி வான வெளியில் பறப்பதும் மிதப்பதுமாக இருந்தது. ராஜகோபாலனுடைய வரவேற்பும், மறவாத அன்பும், நட்புரிமையும் சேர்ந்து அவனுக்கு இன்பக் களிப்பை ஊட்டின. இந்த நிலையில், தான் வந்த காரியத்தைப் பற்றியோ, தன் எதிர் காலத்தைப் பற்றியோ பேசாமல் ராஜ கோபாலனைத் தன் விருப்பம்போல் எதையாவது பேச விட்டால் சந்தோஷமாக இருக்கும் என்று நினைத்தான். ஆனால் ராஜகோபாலனோ மணற் பரப்பில் போய் உட்கார்ந்த மாத்திரத்தில், "என்கிட்டே எதையோ பேசணும்னு சொன்னயே, என்ன விஷயம்?" என்று ஆரம்பித்து விட்டான்.

"அது ஒண்ணும் அப்படித் தலை போகிற விஷயமில்லே. மெல்லப் பேச லாம். நீ மெட்ராஸ் சமாசாரங்கள் எதையாவது சொல்லு, கேட்போம்." என்றான் ரங்கராஜன்.

"ஏதாவது லவ் அஃபேரா? ஏன் மென்னு முழுங்கிறே?" என்று ராஜ கோபாலன் கேட்டதும் ரங்கராஜன் விழுந்து விழுந்து சிரித்தான்.

"சிரிச்சு மழுப்பாதே. சும்மா சொல்லு!"

"நீ கேட்ட கேள்விக்கு இன்னும் ஒரு மணி நேரம் சிரிக்கலாம் போல இருக்கு!" என்று சொன்ன ரங்கராஜன், "நான் பேச வந்தது கொஞ்சங்கூட

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!



ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம் அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில் அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும் செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும் ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும் ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள். தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள் அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!

பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும் திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா. ஆம், இது ஒரு காட்பரிஸ் தயாரிப்பு!






## சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்
## காட்பரிஸ் போர்ன்விடா.

Bensons/C351/TAM

'லவ்' பண்ண முடியாத ஒரு விஷயத்தைப் பற்றி! தெரிஞ்சுதா? இன்னிக்குத்தான் சன்னத் வாங்கினேன். மதுரைக்குப் போய் போர்டு போடப் போறேன். இதை உன்கிட்டச் சொல்லி அடுத்து நான் என்னென்ன செய்யணும் என்கிறதைப் பற்றிக் கேட்க வந்தேன்'' என்றான்.

''அப்படியா? நல்ல செய்திதான். ஆனால், இதைக் கொஞ்சம் கூட 'லவ்' பண்ண முடியாத சங்கதின்னு ஏன் சொல்லறே?''

''எனக்குப் பிடிக்காததை வேறே எப்படிச் சொல்றது? அப்பாவோட விருப்பத்துக்கு இணங்கி இந்தத் தொழிலிலே இறங்க வேண்டி யிருக்கு.''

''உனக்கு வேறே எந்தத் தொழில் பிடிக்குமோ அதைச் செய்யறது?''

''வேறு எந்தத் தொழில் தெரியும்? அதுதானே பிரச்னை!... அது இருக்கட்டும். உனக்கு இந்த வக்கீல் தொழில் பிடிக்கிறதா? அதைச் சொல்லு'' என்று ரங்கராஜன் கேட்டான்.

''பிடிச்சிருக்கா, பிடிக்கல்லையா என்கிற கேள்விக்கே இடமில்லே. வருமானம் வர்ற ஒரு தொழிலைச் செய்யறதுன்னு ஆயிட்ட பிறகு, பிடிக்கிறது, பிடிக்காததைப் பத்திப் பேசிக்கவே நேரமிராது. நான் இப்போ மாசம் அறுநூறு ரூபாய் சம்பாதிக்கிறேன். வேறே வழியிலே இதைச் சம்பாதிக்க முடியாது. சம்பாத்தியமே தேவையில்லேன்னு ஒருத்தன் இருக்கிறதுக்கு ரெண்டு காரணம் இருக்கணும்: ஒன்று ஏதேஷ்டமான பூர்வீகச் சொத்து. அது இருந்தாப் பிடிக்கிற தொழில் அமையற வரையிலும் கையைக் கட்டிக்கிட்டு இருக்கலாம். இல்லே, ஒரு பெரிய இலட்சியம் இருந்தாலும், சம்பாத்தியத்தைப் பத்திக் கவலைப்படாமல் இலட்சியத்துக்காக வாழ்நாளைச் செலவழிக்கலாம். எனக்குப் பூர்வீகச் சொத்தும் இல்லே; பிரமாதமான லட்சியமும் கிடையாது. எனக்குப் பிடிக்கிறதையும், பிடிக்காததையும் பத்தி யோசிக்க யோக்கியதை உண்டோ?''

தொடர்ந்து பேசிய ராஜகோபாலன் பிடிக்கிறது, பிடிக்காதது மட்டுமின்றி நியாய அநியாயங்களைப் பற்றிக் கூட நினைப்பதற்குத் தகுதி யில்லாத நிலையில் உலகில் ஏராளமானவர்கள் வாழ்வதாகச் சொன்னான். பண்டங்களை உற்பத்தி செய்யும் ஒரு தொழிற்சாலையில், சிப்பந்திகளுக்கு அவரவர் வேலையைச் செய்யும் தகுதியையும் பொறுப்பையும் தவிர அந்தப் பண்டங்கள்



''காலில் கிசுகிசு பண்ணினது போதும்; எழுந்திருப்பா!''

நியாய விலைக்கு விற்கப்படுகின்றனவா, நல்லவர்களுக்கு விற்கப்படுகின்றனவா, விற்ற பணம் நல்லவர்களுக்கு மட்டும் பயன்படுகிறதா என்றெல்லாம் யோசிக்கும் தகுதியும் பொறுப்பும் உண்டோ? என்று கேட்டான். அதைப் போலவே சமூகம் என்ற பெரிய கட்டுக்கோப்பில் பெரும்பாலானவர்கள் தங்கள் பங்கு வேலையையும் அதற்கான ஊதியத்தையும் தவிர வேறு எதைப் பற்றியும் கவலையில்லாமல் பணியாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது என்றும் கூறினான். இந்த நிர்ப்பந்தத்துக்கு உட்பட மறுப்பவர்கள் தியாகம் செய்யத் தயாராக இருக்க வேண்டும் என்றும், ஒரு மகத்தான லட்சியத்துக்குப் பாடுபடுவதைத் தவிர வேறு வாழ்க்கை தங்களுக்குத் தேவையில்லை என்று உறுதி மன உறுதி படைத்திருக்க வேண்டும் என்றும் கூறிய ராஜகோபாலன், அவனோடும், ரங்கராஜனோடும் படித்த சிலரை உதாரணமாகக் குறிப்பிட்டான்.

ஒருவன் பி.எல். தேறியும் வழக்கறிஞராகத் தொழில் செய்யாமல் ஓர் அரசியல் கட்சியில் சேர்ந்து கட்சிப் பிரசாரத்தில் ஈடுபட்டிருப்பதையும், இன்னும் ஐந்தாறு வருஷங்களில் ஒரு பெரிய பதவியில் அமரப் போகிறோம் என்ற தன்னம்பிக்கையினால் தற்போது கையில் காசில்லாமல் கஷ்டப்படுவதைக்கூடச் சகித்துக் கொண்டிருப்பதையும் ராஜகோபாலன் குறிப்பிட்டான்.

வேறொருவன் ரசாயனத் துறை ஒன்றில் புதிய புதிய பரிசோதனைகளைத் தானாகவே செய்து வந்தான். அவன் அந்தத் துறையில் தன் ஆராய்ச்சியைச் செலுத்தி, ஒரு பெரிய உலக சாதனையை நிகழ்த்தும் நோக்கத்துடன் பெரிய இடத்தில் தனக்கு ஏரான



**இப்படியும் எடுக்கலாம்!**

ஓர் அமெச்சூர் எடுத்த படம் இது. லென்ஸ் மீது பாதுகாப்புக்கு உள்ள மூடியைக் கழற்ற மறந்துபோனதன் விளைவு!

கருத்து: டெல்லி டேவிட்ராஜ்.

அனுப்பியவர்: முத்து.

மான சொத்துக்களோடு பெண்ணைக் கொடுக்க வந்தும், கல்யாணமே வேண்டாம் என்று சொல்லிவிட்டு அமெரிக்காவுக்குப் போய்விட்டான்.

அவனுடைய கதையைச் சொன்ன ராஜகோபாலன், ''அப்படி அவன் அமெரிக்காவுக்குப் போனது அவன் அப்பாவுக்குக் கொஞ்சமும் பிடிக்கல்லே. எவ்வளவோ தடுத்துப் பார்த்திருக்கிறார்......'' என்று கூறியபோது, ''ஏன்?'' என்று கேட்டான் ரங்கராஜன்.

''அவன் அந்தப் பெரிய இடத்துப் பெண்ணைக் கலியாணம் பண்ணிண்டு வக்கீல் தொழில் செய்து நிறையச் சம்பாதிக்கணும் என்கிறது அவரோட ஆசை. இவனுக்கோ ஆராய்ச்சியிலே ஈடுபாடு. அவர் என்ன சொல்லியும் இவன் கேட்கல்லே. தம் பேச்சை மீறிப் போனால் சொத்திலே ஒரு காசு கூடத் தரப் போறதில்லேன்னும் அப்பா பயமுறுத்தினாராம். அதைப் பற்றியும் கவலைப்படாமல் அவன் போயிட்டான்.''

வக்கீலுக்குப் படித்தும் அந்தத் தொழில் செய்ய விரும்பாமல், மனசுக்குப் பிடித்த வேறு துறைகளில் இறங்கத் துணிகிறவர்கள் இந்த உலகத்தில் இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொண்டபோது ரங்கராஜனுக்குச் சந்தோஷமாக இருந்தது. புது ஊக்கம் பெற்றவனைப் போல் நிமிர்ந்து உட்கார்ந்தான். ராஜகோபாலனைப் பார்த்துக் கொஞ்சம் கேலியாகவே கேட்டான்: ''கொள்கைப் பைத்தியம் பிடிச்சி அவன் அமெரிக்காவுக்கு ஓடினது மகா முட்டாள்தனம்னு நீ நினைக்கிறே! இல்லையா?''

''அதுதான் இல்லே. அவனை நான் பாராட்டுகிறேன். இப்படித் துணிந்தவங்களாலேதான் உலகத்திலே பெரிய காரியங்களைச் சாதிக்க முடியும். இவனே ஒரு காலத்திலே நோபல் பரிசு வாங்கினாலும் வாங்குவான். பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் சொல்லியிருக்கிறாருன்னு எங்க அப்பா அடிக்கடி சொல்லுவார்: தன் சொந்த சுகத்தைத் தியாகம் பண்ணத் தயாராக இல்லாதவனாலே எந்தப் பெரிய காரியத்தையும் சாதிக்க முடியாதாம். அது நூற்றுக்கு நூறு உண்மையான வாக்குன்னு நான் நம்பறேன். அப்படியிருக்க மற்ற முட்டாள் ஜனங்களைப் போல நான் அவனோட தியாகத்தைக் கேலி பண்ணுவேனா?''

''நாம்பளும் தியாகம் பண்ணத் தயாராக இல்லாதபோது மத்தவங்க தியாகத்தைப் பாராட்டுறதிலே அர்த்தமில்லேன்னு நான் சொல்றேன். அப்படிப் பாராட்டுறது சுயநலமிகளோட குணம். 'எவனாவது எப்படியும் சீரழிஞ்சி பெரிய காரியங்களை உலக நன்மைக்காகச் செய்யட்டும். நாம்ப மட்டும் நிறையச் சம்பாதிச்சுக்கிட்டுச் சௌக்கியமா இருப்போம்'னு நினைக்கிறது சுயநலமில்லாமே வேறே என்ன?''

''அப்படிப் பார்த்தால் நான் சுயநலமிதான். ஒப்புக் கொள்கிறேன். ஆனால் என் சக்தியே அவ்வளவுதான். ஏதாவது ஒரு கொள்கைக்காக லட்சியத்துக்காக வாழறதுக்கு வேண்டிய சொந்த சக்தியோ, பின்பலமோ எனக்கு இல்லே. நான் சம்பாதிக்கத்தான் பத்துப் பேருக்கு வயிறு நிறைய வேண்டியிருக்கு. அது இருக்கட்டும். இவ்வளவு பிரமாதமா பேசுற நீயும் கூட என்னைப் போல் வக்கீல் தொழில் செய்யவும் சம்பாதிக்கவும்தானே முடிவு பண்ணியிருக்கிறே! உனக்கு நிறையச் சொத்து சுகம் இருந்தும்கூட, உலக நன்மைக்காக ஒரு பெரிய காரியத்தைச் செய்வோம், அதுக்காகச் சொந்த வாழ்க்கையின் சுகத்தைத் தியாகம் பண்ணுவோம்னு நீ ஏன் நினைக்கல்லே? உலக நன்மைக்காகக்கூட வேண்டாம், ஊர் நன்மைக்காக, ஒரு தெருவின் நன்மைக்காக, ஒரு வீட்டின் நன்மைக்

காகக்கூட நீ தியாகம் செய்யத் தயாரா இருக்கிறயோ?''

ராஜகோபாலன் இவ்வாறு கேட்கவே, ரங்கராஜன் வெளித் தோற்றத்துக்குச் சிரித்துக் கொண்டானே ஒழிய மனசுக்குள் சுருக்கென்று ஏதோ தைத்தது போன்ற உணர்ச்சியையே அடைந்தான். தன்னைத் தானே பரிசோதனை செய்து கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

''சொல்லு! நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லு!'' என்று ராஜகோபாலன் தார்க் குச்சி போட்டான்.

''என்ன பதில் சொல்றதுன்னே புரியல்லே. நான் தியாகம் பண்றதைப் பத்தி இப்போ கவலைப் படல்லே. என் கவலே வேறு'' என்றான் ரங்கராஜன். பிறகு அவனே சொன்னான். ''எதுக்காகத் தியாகம் பண்ணறது என்கிறதுதான் என் கவலே! இனிமேல்தான் ஒரு கொள்கையையோ, லட்சியத்தையோ கண்டுபிடிக்க வேண்டியவனா யிருக்கிறேன்!''

இருவருமே சிரித்தனர். அப்போது ரங்கராஜன், ''நாம்ப இங்கே ரெண்டு பேரா இருக்கிறதனாலே நான் சிரிக்கிறேன். நான் தனியா இருந்திருந்தால், என் நிலையை நினைச்சி நான் அழுதாலும் அழுதிருப்பேனே ஒழிய நிச்சயம் சிரிச்சிருக்க மாட்டேன்'' என்றான்.

அவன் குரலில் காணப்பட்ட ஆழத்தை ராஜகோபாலன் சுலபமாக அளந்து விட்டான். அதனால், அந்தப் பேச்சை அப்படியே நிறுத்தி விட்டு, மதுரையில் முத்துக் குமார் எப்படி இருக்கிறான் என்பதைப் பற்றியும், அந்த நகரில் வாழ்க்கை வசதிகள் எப்படி என்பதைப் பற்றியும் கேட்கத் தொடங்கினான். சிறிது நேரம் இப்படிப் பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டு இருவரும் கடற்கரையிலிருந்து வீடு திரும்பினார்கள்.

ரங்கராஜன் அன்றிரவு ராஜகோபாலன் வீட்டில் சாப்பிட்டுவிட்டு, மறு நாள் காலையிலேயே பஸ்ஸிலோ, ரயிலிலோ மதுரைக்குத் திரும்பப் போவதாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டான்.

''போய்க் கடுதாசு போடு. மற்ற சமாசாரங்களுக்குக் கடுதாசு போடாட்டாலும் பரவாயில்லே, உன் கல்யாணப் பத்திரிகையை அனுப்ப மறந்திடாதே'' என்றான் ராஜகோபாலன்.

''கட்டாயம் அனுப்புவேன். இது சொல்லித்தான் தெரியணுமா?'' என்று கூறிவிட்டு ரங்கராஜன் ஒரு டாக்ஸியைப் பிடித்துக் கொண்டு லாட்ஜுக்குத் திரும்பினான் (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## ஏர் இந்தியாவின் கலை மலர்

அயல்நாடுகளுக்கு விஜயம் செய்கிற இந்தியர்களுக்குச் சில சமயம் தாய்நாடு பற்றிய எண்ணமும் ஏக்கமும் ஏற்பட்டு விடுவதுண்டு.

அப்படி நேரும் போது அந்த நகரில் உள்ள ஏர் — இந்தியா காரியாலயத்துக்குப் போய்ச் சற்று நேரம் உட்கார்ந்திருந்து விட்டுத் திரும்பலாம். ஓரிரு இந்தியர்களுடன் பேசும் வாய்ப்புக் கிட்டும் என்பதுடன் ஏர் இந்தியா காரியாலயமோ இந்தியப் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் விதத்தில் தான் கலை உணர்வுடன் அலங்கரிக்கப்பட்டிருக்கும். கதவுகளில் வேலைப்பாடுகள், சுவரை அலங்கரிக்கும் வண்ண ஓவியங்கள், ஆங்காங்கே எடுப்பாகக் காட்சி தரும் சிலைகள் எல்லாம் பாரதத்தின் தொன்மையான சிற்ப சித்திரங்களைப் பிரதிபலிப்பனவாக விளங்கும். இன்றைய இந்தியாவின் தோற்றங்களையும் அதன் மக்களையும் படம் பிடித்துக் காட்டுவது போன்ற நவீன கால ஓவியங்களும் சில நகரங்களில் ஏர் இந்தியா காரியாலயங்களில் உண்டு.

இந்த விதமாக ஏர்—இந்தியா, விமானப் போக்குவரத்தைத் திறம்பட நிர்வகித்துப் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த பிரயாணிகளைத் திருப்தியாக வைத்திருப்பதுடன் பாரத நாட்டைச் சேர்ந்த ஓவிய—சிற்பக் கலைஞர்கள் பலரை ஆதரித்துக் கலைத்துறைக்கும் அரிய சேவை புரிகிறது.

''மாஜிக் கார்பெட்'' என்ற பெயரில் ஏர் இந்தியா ஸ்தாபனம் ஒரு சஞ்சிகையைப் பிரசுரிக்கிறது. சமீபத்தில் ''மாஜிக் கார்பெட்'', ஒரு சிறப்பிதழாக வெளி வந்திருக்கிறது. உயர்ந்த ஆர்ட் காகிதத்தில் மிக அழகாக அச்சாகி யிருக்கிறது. ஏர் இந்தியாவிடம் இன்று உள்ள விலைமதிக்க முடியாத கலைப் பொக்கிஷங்களின் வண்ணப் படங்கள் பல வற்றைத் தாங்கி வெளிவந்திருக்கும் இந்தக் கலை மலரின் விலையும் குறிப்பிடப்படவில்லை!

The Air India Collection - Magic Carpet Special Issue. Editor : S. K. Kooka; 'Nirmal' 241/242, Backbay Reclamation, Nariman Point, Bombay - 1.

# தொழுத கை

## வையவன்

"நேரமாயிடுத்தே.... அடியே காமு!" என்று சரச் சிகையை இரண்டு கைகளாலும் அடித்து உதறி முடித்தவராக உள்ளே பார்த்துக் கத்தினார் சிதம்பர குருக்கள். அடுப்பு ஊதும் ஓசைதான் வந்ததே யொழியப் பதில் இல்லை. நேற்றுப் பெய்த மழையில் ஆற்று நீர் ஜில்லென்று குளிர்ந்து விட்டிருந்ததால் பனிக் கட்டியில் குளித்தமாதிரி உடம்பு இன்னும் நடுங் கிக் கொண்டிருந்தது.

"வயசாயிண்டு போறதோ இல்லையோ? உஷ்ணத்தையும் குளிரையும் தாங்க முடியல்லே" என்று தமக்குள் சொல்லிக் கொண்டே சுவரில் மாட்டி யிருந்த கண்ணாடியைப் பார்த்தார். அதற்கும் வயசாகிவிட்டது. ரசம் தேய்ந்த பழுப்பு மங்கல்.

கண்ணாடியில் பூச்சாண்டி முகம் மாதிரி பிம்பம் தெரிந்தது. விடைத்து நின்ற கன்ன எலும்பின் கீழே நெருஞ்சி பூத்தாற் போல் நாலு நாள் தாடி வெள்ளி அடர்ந்திருந்தது.

"நாளைக்கு நாவித கோவிந்துக்குச் சொல்லி யனுப்பணும்" என்று நினைத்தவாறு மீண்டும் முகத்தைப் பார்த்தார். வயது கன்னச் சுருக்கத்திலும் கண் குழியிலும் சற்று மிகையாகத் தெரிந்தது. 'ஆயிடுத்து. புரட்டாசி தாண்டி ஐப்பசி வந்தா ஐம்பது' என்று எண்ணியவர் நேரமான பிரக்ஞை உறைக்கவே வாசலுக்குப் போட்டிருந்த கடப்பைக் கல்லைப் பார்த்தார். வெய்யில் வாசலிலிருந்து வராந்தாவுக்குப் படியேற முயற்சித்துக் கொண்டிருந்தது. அதுதான் அவர் கடிகாரம்.

"ஏக நேரமாயிடுத்தே" என்ற பதைப்போடு கால் இற்றுப் போன முக்காலியின் மீது வைத்திருந்த பூக்குடலையைத் தூக்கிப் பார்த்தார். சேர்த்துப் பிடித்தாலும் இரண்டு கைக்குக் காணாது பவழ மல்லிகை.

"ஒண்ணொண்ணுக்கும் தரித்திரம் வந்து புஷ்பத்துக்கும் பஞ்சமாயிடுத்தே, ஈசுவரா!" என்று வாய் விட்டுச் சொல்லிப் பெருமூச்சு விட்டார் சிதம்பர குருக்கள்.




பூவுக்காகக் காலையில் எழுந்து 'ஒரு மைல் செவலப்பட்டி வரை நடக்க வேண்டியிருந்தது. அதிலேயே நேரமாகிவிட்டிருந்தது. அதுவும் தவறி முளைத்து அபூர்வமாக நிற்கும் ஒற்றைச் செடி. பறித்துப் போட்டதுமே மனம் வெறிச்சிட்டது. வழியெல்லாம் குருக்கள் குடலையைத் தூக்கித் தூக்கிப் பார்த்து வந்தார். அதனாலேயே அதிகரிக்கப் போவது ஒன்று மில்லை. இருந்தாலும் ஸ்வாமியின் சன்னிதிக்கு இதுவும் ஓர்

அத்தாட்சிஎன்ற உறுத்தல். இடிந்து சிதைந்து விட்ட கோவில் பிராகாரத்துக்குள் கால் நடைப் போக்குவரத்து தாராளமாகி விடவே தான் இந்த அலைச்சல். செவ்வலரி — வாளிப் பூ பூக்கும் பெரிய செடி துவம்சம் ஆகி விட்டது. சுற்றிலும் எங்கும் பூஞ்செடிகள் இல்லை. ரேஷனிங் ஆபீசர் மாதிரி செலவுப் பட்டி பவழ மல்லிகை தரும் கருணையை நம்ப வேண்டி வந்தது. மறுபடியும் உள்ளே பார்த்துக் கத்தினார்.

''காமு! நேரமாயிடுத்தே... பிரசாதம் ரெடியா?''

''தோ, சித்த நாழி பொறுங்கோ. இன்னும் ஒரு கொதி வந்துடுத்துன்னப் போறும். அரக்கப் பரக்கச் செஞ்சாலும் பொழுது விடிஞ்சு பொன்னுக் காஞ்சுடறது.''

''நான் பொறுத்துப்பேன். பகவான் பொறுத்துப்பாரா?''

''சித்த நாழி லேட்டானா பகவான் ஒண்ணும் கோச்சுண்டுட மாட்டார். இந்த ஊர் வக்கணைக்கு அவருக்கு இனிமேத்தான் கோபம்னு வரணுமாக்கும்!''

''என்னடி நாஸ்திகம் பேசறே!'' என்று அதட்டினார் குருக்கள்.

''ஈசுவரா... ஈசுவரா! இதிலே என்ன நாஸ்திகம் கெடக்கு? உள்ளதைத்தானே சொன்னேன். வேப்ப மரத்துக் கழனி அறுவடையாகி மாசமாப் போறது. கோவில் மான்யம்னு பேரு. வைக்கப் போரிலேருந்து மணி விடாமே சப்ஜாடாவா தர்மகர்த்தா ஆத்துக்குப் போய்ச் சேர்ந்துட்டது. அர்ச்சகருக்கு ஈரத் துணியே போறும். பிழிஞ்சு பிழிஞ்சு வயித்து மேலே போட்டுண்டு மந்திரம் ஜபிச்சுடுவார்னு தீர்மானிச்சுட்டாரோ என்னமோ அந்த மகானுபாவன்! கொடுக்க வேண்டியதைக் கொடுன்னு கேக்க வேண்டியவா கேட்டாத்தானே? அழாமயே குழந்தைக்குப் பசிக்கறதுன்னு அம்மாக்காரிகூடக் கண்டு பிடிக்கறதில்லே இந்தக் காலத்திலே. கேளுங்கோ கேளுங்கோன்னு மீன மேஷம் பார்க்கறேன். பானையிலே காப்படியோ அரைப் படியோ தேறும். நாளைப் போது விடிஞ்சா பகவானும் உண்ணா விரதம் இருக்க வேண்டியது தான்.''

காமு படபடவென்று பொரிந்து கொண்டு போனாள். அவளுக்கும் வரவரத் துணிச்சல் அதிகரித்து விட்டது. வயதும் வறுமையும் கொடுத்த துணிச்சல். வாயைத் திறந்தால் எந்தெந்த ஏமாற்றங்களின் நாளையோ இழந்து விட்ட மாதிரி சர் சர் ரென்று கணைகள் பாய்கின்றன.

கடுகடுவென்று கொள் பொரியப் போகிறது என்று எதிர்பார்த்த முகம், கன்றிச் சிவந்து, கண்ணில் கண்ணீர் கரை கட்ட நிமிர்ந்து பார்க்க முடியாது தத்தளித்தது.

''கொதிக்கிறது. துணியிலே பிடிச்சுண்டு போங்கோ.''

''ம்'' என்று முனகியபடியே அங்கவஸ்திரத்தால் பிரிமணை சுற்றித் தட்டை வைத்துக் கொண்டு, பூக்குடலையைத் தோளில் மாட்டினார்.

'என்னமோ துக்கம். முப்பது வருஷ தாம்பத்தியத்தில் விருக் விருக்கென்று பாலைவனத்திலே நடக்கறாப்பலே நடந்து ஆகி, ஆறுமே... மரத்து.... எவ்வளவு ஏமாற்றமோ?' மெதுவாகத் துணிச்சலை வருவித்துக் கொண்டு தலைநிமிர்ந்து பார்த்தார் குருக்கள். அந்த ஆதங்கத்தை மனசுக்குள்ளேயே கிரகித்து அதை நேரிடச் சக்தியின்றிக் காமு முகம் திருப்பிக் கொண்டாள்.

''சம்போ'' என்று உணர்வின்றி முனகி விட்டு, தடி தடியாகத் தெரு நடையில் போட்டிருந்த கருங் கற்கள் இடறாமல் காலைத் தூக்கி வைத்து ஜாக்கிரதையாகக் கீழே இறங்கினார்.

''தோ அந்த வூடுதான். அடடே சாமியே வெளியே வர்றாரே. சாமீ! ஒங்க வீட்டுக்கு விருந்தாளி'' என்று மாட்டுக்காரக் கோபாலு யாருக்கோ வழி காட்டிக் கொண்டே அறிமுகப்படுத்தினான்.

''விருந்தாளியா?'' கண்ணை இடுக்கிக் கொண்டே கோபாலுக்குப் பக்கத்தில் நின்றவரைப் பார்த்தார் குருக்கள்.

பாரதப் பிரசங்க காலத்தில் களபலி கொடுக்கிற நாளில் அரவானை வரைந்து வைப்பார்களே அந்த மாதிரி வஞ்சனையில்லாத உருவம். புஜங்களும் மார்பும் உதரமும் அபார வைத்தது. மல் ஜிப்பா, மல் வேஷ்டி, தங்கச் சங்கிலி, கடிகாரம், மோதிரங்கள் — காலை வெய்யிலில் நகைத்தன. இத்தனை பந்தாவுக்கும் பொருந்தாத குழந்தை முகம். மீசை முளைத்துப் பம்மென்று உப்பிய கன்னங்கள். தலைக் கிராப்பில் நரை. இருப்பினும் உடம்புக்கும் வயதுக்கும் ஏற்றபடி முதிராத முகம்.

''யார்?'' சிதம்பரக் குருக்கள் எதிர் வெய்யிலின் கூச்சத்தால் கண்களை இடுக்கிக் கொண்டு உற்றுப் பார்த்தார்.

''என்னலே செலம்பரம்... பிய்க்கா பிய்க்கான்னு முழிக்கே... அடையாளம் தெரியல்லியா...? நெனச்சேன்.... மறந்திருப்பான்டு.''

கடகடவென்று பம்பைப்பிளத்துக்கொண்டு தண்ணீர் பீச்சுவதுபோல் விழுந்து விழுந்து சிரிக்கிறார் அந்தப் பேர்வழி.

சிதம்பரக் குருக்களுக்கு ஏதோ நினைவில் வெளிச்சம் போட்டாற்போல் தெளிவாயிற்று. நாற்பது வருஷத்துச் சமாசாரம். திருநெல்வேலி டவுன் வாசம். பள்ளிப் படிப்பு. இந்த செண்பகராமனோடு சேர்ந்து தாமிரபரணியில் தண்ணீர் பார்க்க விட்டுக் காவலிலிருந்து தப்பி ஓடியது. ஒரு துட்டுக் கொடுத்துப் பரிசல் பயணம்... எத்தனை நிகழ்ச்சிகள். சிக்கலிலிருந்து மூலைச் சரட்டை உருவியதும் ஓடி வருகிறமாதிரி சரசரவென்று ஞாபகம்...

''நீயா... ஏலே செம்பகம்'' — பாச உணர்வோடு கூவினார் சிதம்பர குருக்கள்.

''ஹாப்பா...!'' என்று பெருமூச்சு விட்டான். ''கண்டு பிடிச்சுட்டியே!''

''நீ குளிச்சயா? பெட்டி, படுக்கை யெல்லாம் எங்கே?''

''எல்லாம் பேட்டை ஹோட்டல்லே. காலம்பறக் குளிச்சு டிபன் புடிச்சுட்டுத் தேன் பொறப்பட்டேன்.''

''அப்ப கோவிலுக்குள்ளே வாயேன்! கொஞ்ச நாழி பூஜையாயிட்டதும் வந்துடலாம். எங்கேன்னாலும் போவோம்!''

"ஓ" என்று நாக்கைக் கடித்துக் கொண்டான் செண்பகராமன். "மூட்டியேப் பாரு! நாம்பாட்டுக்கு நெல்லையப்பர் கோவில் பேரி கணக்கா முழக்கிட்டுக் கெடக்கேன். நட நட" என்று தொடர்ந்தான்.

சிவகரை சன்னிதியில் அபிஷேகத்தை முடித்துக் கொண்டு முருகன் சன்னிதானத்தை மூடியிருந்த கம்பி வைத்த இரும்புக் கதவைத் திறந்தார் குருக்கள். கதவுக்கீல் மரமர வென்று வேதனையோடு இரீச்சிட்டது.

"என்ன செலம்பரம், கதவுக் கீலுக்கு ரொம்ப நாளா பசிக்கிறாப் போல காருது!"

"அந்தக் கொறையெ ஏன் கேக்கறே! கதவுக்கு மட்டுமா பசி? கோவில் சொலத்துக்கும் பசி. பிரசாதத்தைப் பார்த்தயோல் லியோ... ஏதோ பகவான் கண்ணைத் தொடைக்கிறுப்பலே.... நா என்ன பண்ணுவேன்... கோவில் வருமானம் — ஊர் மனுஷா அக்கறை அவ்வளவு தான்."



செண்பகராமன் மூலஸ்தான வாசற்படிக்கு அருகே தெத்துக் குத்தலாக, எப்போது வேண்டுமானாலும் விழுந்து விடுவேன் என்ற எச்சரிக்கையோடு சத்தியத்துக்குக் கட்டுப் பட்டு நிற்கும் விதானத்தைப் பார்த்தான்.

"ஏ அப்பா! இங்கே நிக்கவே நடுங்குது டாப்பா. டுடுக்குன்னு பூமி ஒரு குலுங்கு குலுங்கிச்சின்னா பூமாரி பொழிஞ்சு அபிஷேகம் பொதைச்சடும் போலிருக்கே!" என்றான்.

"விதானத்தைச் சொல்றியா? அந்த வருஷமா அப்படித்தான் கெடக்கு."

"என்ன ஊரு, என்ன மனுஷருங்க! கடலாக் கோவில் விரிஞ்சு கெடக்கு. பேரு தான் தெக்கே கரைக்கும் கொடி கட்டிப் பறக்குது. களுத்துப்போன யானையா இருக்கே. கோவில் மூலே முக்குன்னு எந்த லெக்கிலேயும் எருக்கு மொளைச்சுக் கெடக்கு. சுத்து சொவரெல்லாம் முத்தாச்சி வாய்ப் பொக்கையாப் பொளந்து கெடக்கு. எருமை மேயுது. என்னவே கோவில் இது? நீயும் மொணக்கெட்டு இருபது வருஷமா இங்ஙனே சாமியைக் குளிப்பாட்டிக்கிட்டுக் கெடக்கே!"

"நான் என்னப்பா பண்ணட்டும் செம்பகம்? அளந்து கொடுத்த படியை வாங்கிக் காலம் தள்ளறவன்."

"அதான் ஏண்டு கேக்கேன். இதென்ன தாலுக்காக் கச்சேரி உத்தியோகமோ? தட்டுலே தெதம் சில்லறை உண்டுதான்னு சாமியைக் கும்பிடுதக்கே ஆள் புடிக்க வாராளுங்கறே. கோவில் லெச்சணத்தே குருக்கள் கும்பியிலே பாருடான்னு கதை சொல்லுவாளுகளே அம்மாடிசி! அங்கங்கே கோவில் அய்யாரைக் கும்பிட்டு வச்சிருக்க தெக்கத்திச் சீமையிலே வேலி வேலியா மானியத்தை வச்சுக்கிட்டு அலையுறாளுவ. நீ என்னமோ இந்த அஞ்சறைப் பொட்டியிலே மஞ்சத் தூளு கணக்கா இருபது வருசமா மக்கிட்டுக் கெடக்கே இல்லியே!"

சிதம்பரக் குருக்கள் மௌனமாக மூர்த்தியைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தார். இது செண்பகராமன் மட்டும் கேட்கிற கேள்வியில்லே. காமு நிவசரி கேட்டுக் கொண்டிருக்கிறாள்.

"என்னவே கேக்குறேன்? பதிலைக் காங்கலே?"

குருக்கள் முருகப் பெருமானுக்குத் திருவாடை சுற்றிக் கொண்டிருந்தார். பேச்சை விட்டு, வாய் மந்திரம் சொல்லிக் கொண்டிருந்தது. முகத்தில் அலையும் சுழிப்புமற்ற தண்ணீர்க் கட்டு மாதிரி அமைதி. அமைத்துக்கு... அடியாழத்துக்கு யாரோ எத்திவிட எத்திவிட அமிழும் மௌனம். அபிஷேகம் செய்து, ஆடை மாற்றி, புஷ்பமிட்டும் வெறும் சடங்காக இன்றி, தனக்குள் தானே பேசிக் கொள்ளும் அந்தரங்க உறவு போன்று கண்ணில் பார்வை கொஞ்சிற்று.

வளவளவென்று பேசிக் கொண்டு போன செண்பக ராமனைத் தனியே நிறுத்திவிட்டு அவர் ஒதுங்கிவிட்டாற் போலத் நினைத்தான் அவன். சிதம்பரக் குருக்கள் பூஜையில் ஈடுபட்டிருப்பதைப் பார்க்கப் பார்க்க

கேட்ட கேள்விக்கும் கேட்க எண்ணிய கேள்விகளுக்கும் பதில் வருவது போல் தோன்றியது.

மூலஸ்தானத்து இருட்டில் முதலில் மூர்த்தி நன்றாகத் தெரியவில்லை. தீக்குச்சியைக் கிழித்துத் தூங்கிக் கொண்டிருந்த தூங்கா விளக்கை ஏற்றியதுமே செண்பகராமன் அயர்ந்து விட்டான். என்ன அழகு... எண்ணெய்ப் பிசுக்கை மீறி என்ன களை? மூர்த்தியின் முகத்தருகில் விளக்குத் தழல் ஆடிற்று.

சற்றே திறந்தது போன்ற இதழ் மடிப்பில் ஒரு குறுஞ் சிரிப்பு. நம்பிக்கையின் மிடுக்கு. அபயம் — கருணை. 'பயமா... நானிருக்கிறேனே! எல்லாமே நான். எனக்கப்புறம் என்று என்னை மீறியொன்று எதுவுமில்லை. வைத்தியமே' அந்தச் சிரிப்பு கட்டளைபோல் என்னென்ன பேசுகிறது! அந்த அபய ஹஸ்த முத்திரை. வேல் உண்டு என்ற நிச்சய உத்தரவாதம். வேலைப் பிடித்த லாகவம் கடைக்கணித்தாற் போன்ற பார்வையில் உயிரையும் அவனையும் உலகையும் நன்மையும் அறிந்த ஞானச் செருக்கு. தீமையைச் சுடு வேல் என்று கருணையூடே கனிவூடே ஒரு நிச்சயம்.

சிதம்பரக் குருக்களின் மந்திரம் கருங்கல் லிழைந்த மூலஸ்தானத்தில் கணகணவென்று எதிரொலிக்கிறது.

செண்பகராமனுக்கு உடல் சிலிர்த்தது. பரவசச் சிலிர்ப்பல்ல. நெஞ்சில் ஏதோ பனிக்கட்டி இறங்கி வயிற்றைச் சில்லென்று மோதிய பயச் சிலிர்ப்பு. மறுகணம் சமாளித்துக்கொண்டான்.

''சிற்பியின் கைவேலைதானே?''

அவனது கண்கள் அங்குலம் அங்குலமாகச் சிலையை நோட்டமிட்டன.

குருக்கள் அவன் உள்ளங் கையில் விபூதியையும் குங்குமத்தையும் மௌனமாகப் போட்டார்.

உள்ளங்கையில் விழுந்த பிரசாதத்தை வாயில் போட்டுக் கொண்டான் செண்பகராமன்.

கீல் கரகரக்க இரும்புக் கதவைச் சாத்திக் கொண்டு கிளம்பினார். செண்பகராமன் பின் தொடர்ந்தான்.

''முன்னே கேட்டே பாரு ஒரு கேள்வி: இதென்ன தாலுக்காக் கச்சேரி உத்தியோகமான்னு!''

''சொல்லு!''

''உத்தியோகமா யிருந்தா ஒதறி எறிஞ்சுட்டுப் போயிடலாம்.''

''அப்பா?''

''என்னத்தைச் சொல்றது?''

சிதம்பர குருக்களுக்குத் தம் உணர்ச்சிகளுக்குத் தாமே விளம்பர போஸ்டர் ஒட்டிக் கொள்வது போலிருந்தது.

''செம்பகம்! இருவது வருஷத்துக்கு முன்னாடி இந்தக் கோவில்லே கொடத்தைக் கையிலே தூக்கினேன். ஏழை சாமிடா, ஊர் உதவாதுன்னு ஆரோ பயமுறுத்தினா. நேக்கொண்ணும் அவா பயமுறுத்தினதுப்பிலே பயம் வந்துடுத்துன்னு தோணலை. பூஜையிலே எறங்கிட்டா மனசு தெம்புணர்ந்து எல்லாம் நெறஞ்சாப்பிலே பூர்ச்சண்டு நிக்கறது. அப்பப்போ பொறுப்பிலே கஷ்டம் வந்துண்டும், போயிண்டும் இருக்கு. எந்தப் பொறுப்பிலேதான் கஷ்டம் இல்லே. சொல்லு! கஷ்டமா யிருக்குன்னு பொறுப்பை மாத்திண்டடறோமா? ஸ்வாமிக்குச் சேவகன்னு விதிச்சாச்சு. ஊதியம் கொடுக்கறதும், உசத்தி வைக்கிறதும் அவன் பொறுப்பு. எஜமான் பொறுப்பு. காசு தராத ஸ்வாமின்னு வேற கோவிலைத் தேடிண்டு போறோம்னு அந்த மூர்த்தி பக்கத்திலே நிக்கறப்போ மனசு அசங்கியப்பட்டுப் போகாது? என்னடா காசுக்கு வந்தியான்னு கேட்காமே நெஞ்சுக்குள்ளே பகவான் கேப்பானே... செம்பகம்! தாயோட பிள்ளைமாதிரி இங்கே பழகிட்டுக் காசுக்குப் பின்னாலே ஓட முடியுமா?''

செண்பகராமன் இதைக் கேட்டு விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தான்.

சிதம்பர குருக்கள் அவனை வீட்டுக்கு அழைத்துச் சென்றார். திண்ணையில் உட்கார்ந்து வெகு நேரம் பேசினார். பேசத் தானா விஷயமில்லை? முப்பது வருஷங்கள். சற்றுக் கழித்துச் சாலைக்குக் கிழக்கே மாஞ்சோலைக்கும் தென்னை வரம்புக்கும் இடையே ஓடிய ஆற்றங்கரைக்குப் போய் உட்கார்ந்து பேசினர். நேற்றைய மழையின் ஈர ஓதமும் திடீரென்று மந்தாரமிட்ட வானும் பேச்சை வளர்த்திச் சென்றன. அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். இருள் விழுது விழுதாய் இறங்கிற்று.

''போவோமா? ரொம்ப நாழியாயிடுத்து! அந்திப் பூஜை செய்யணும்.''

எழும்போது இருவருக்கும் குளமாக உள்ளே ததும்பிய சொந்தக் கதைகளை வடித்து வடித்து வற்றவிட்ட வெறுமை உணர்ச்சி.

வருகிற வழியில் குருக்கள் கூட வரும் ஆசாமியைப் பற்றிய விசாரிப்புக்கள். பல பேர்.

''என்கூடப் படிச்சவன்! பிஸினஸ் பண்றான்'' பெருமையாக எல்லோருக்கும் புன்னகையோடு சொல்லிக் கொண்டு போனார் குருக்கள்.

ராத்திரி சாப்பிட்டுவிட்டு முழங்கையைத் தலையணைக்கு மேல் வைத்துக் கொண்டு கம்பளிக் கதகதப்பில் செண்பகராமன் கேட்டான்:

''ஏலே செலம்பரம்! என்ன சோகத்தைக் கண்டே நீய்யி... கோவிலு... சாமி... ஆடு... செத்துத் துவளாட்டமா மாஞ்சு மாஞ்சு என்ன சோகம்?''

எதிர்த் திண்ணையில் சிதம்பர குருக்கள் பேசினார்.

''நீ ஊரை யெல்லாம் சுத்தினவே என்னத்தைக் கண்டே? ஒலகம் எவ்வளவோ பெரிசா இருந்தாலும் நம்ம நெழலைத்தானே இழுத்துண்டு போறோம். ஒனக்கு அது சோகம். எனக்கு இங்கே பகவான் நெழல்லே சோகம். சோகம்னு என்ன? மனசுக்குத் திருப்திதானே? நாலு மாதிரி அவா அவா மெச்சிக்கிறது தானே?''

''இதெல்லாம் வெட்டிப் பேச்சு. இப் பவே பத்தாயிரம் ரூபாய் ரெடி கேஷ்

கெடைக்கிறதுண்டா நீ கை நீட்டாமப்-போயிடுவியா?''

''பத்தாயிரமா?... பெரிய தொகைதான். ஆனா நேக்கு அவ்வளவு ஆசை யில்லே.''

''நெசம்மா சொல்லுறியா?''

''வேறென்ன? இருந்தாப்லே இரந்து பத்தாயிரத்தைத் தூக்கிக் கொடுத்திட்டா அது எவ்வளவு பெரிய சொவமை. வேணும்னு இந்தக் கோயிலே புனருத்தாரணம் செய்ய லாம். முருகன் சந்நிதிக்கு மேலே ஒரு பெரிய விரிசல். பிராகாரச் சுவரு நாசமாயாச்சு. அதையெல்லாம் தூக்கிக் கட்டலாம்.''

''பித்தம் தலைக்கேறியிருக்குலே ஒனக்கு.''

''ம்ம்... எல்லாரும் அப்படித்தான் சொல் லுறு. நீயும் பாக்கியா விருந்து. டான்னு சொல்லிப்பிட்டே.''

''சரி. அதுகையே வுடு. நானே கொடுக் கேன். அப்படித்தேன் கோயிலேத் தூக்கிக் கெட்டு.''

''என்ன செம்பகம் நீசால் பாங்கி கவர்ன ராட்டம் அவ்வளவு அநாயாசமாச் சொல்லிப் புட்டே?''

செண்பகராமனின் தொண்டை கனத்தது.

''நெசந்தேன்.''

''வெளையாட்டுறியா?''

''கண்ணுறவே... வுட்டேன்னு.''

படுத்திருந்த செம்பர குருக்கள் விசுக் கென்று படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார். செண்பகராமன் அமர்ந்தவான உறுதியளிக் கக்கூடிய பேச்சு அவருக்குக் குபீரென்று ஓர் உற்சாகத்தைக் கொடுத்தது.

''என்ன செம்பகம், பொழுது போகாமே குளிருக்கு அடக்கமாப் பேசிண்டிருக்கியா?''

''அட, இவன் ஆர்ருவன்! ஆக்கனைக் கெட்டுப் போவம்பறுன்? செம்பகராமன் நாக்குலே இது'' என்று குளுரைத்தவாறு கம்பளியை உதறிப் போர்த்திக் கொண்டே எழுந்து உட்கார்ந்தான்.

''நெஜமாவா?''

''அட, கண்ணுறவேங்கறேன். டென் தௌஸண்டு... ரெடி கேஷ். விடிஞ்சதுமே மொத வண்டியிலே பேட்டைக்குப் பொறப் படு. நறுக்குன்னு தகடு தகடா எண்ணிக்க.''

''ஐயோ... ஐயோ...'' மனசுக்குள் முரு கன் சந்நிதி விரிசலை நிமிர்த்திக் கட்டித் தளமும் விதானமும் போர்த்தி. கோவில் காம்பவுண்டு ஒன்னரை ஆள் உயரத்துக்கு எழுப்பிக் கொண்டு....பனைத்தார் குருக்கள். ஆனந்தம். திடீரென்று தனக்கே நல்ல காலம்....கூரை பிய்த்துக் கொண்டு கொட் டும் அதிர்ஷ்டம் வந்த மாதிரி கண் தழு தழுத்துவிட்டது.

''ஆனா ஒரு கண்டிசன்.''

படபடவென்று குருக்களுக்கு மார்பு அடித் துக் கொண்டது.

''என்னது?''

''முருகன் செலையை மாத்திடணும்!''

''ஏன்?''

''அதையெல்லாம் கேக்கப்படாது. மாத் திடணும்.''

''என்னப்பா புதிர்?''

''அது எனக்கு வேணும்.''

''ஒனக்கு வேணும்னு நான்... நான் எப்படி.....'' பாதி பாதி இணைதிக்கொண்

# உவகை தரும் உவமை

சிறிய நிலப் பகுதியிலே குறை வாக, நெல் விளைந்திருந்தாலும், அதனைச் சோறாக்கி யானைக்குப் போட் டால் நீண்ட நாளைக்கு வரும்!

ஆனால் பெரிய நிலப் பரப்பிலே, நிறைய நெல் விளைந்திருந்தாலும், அதனைச் சோறாக்கிப் போடாமல் யானையை அதிலே மேய விட்டால் கொஞ்ச நாளைக்குத்தான் வரும்!



அதோடு மட்டுமல்லாமல், காலாலே மிதிபட்டு வீணாகவும் நிறைய அழியும்!

அது போல் நாட்டு மக்களின் நிலைமையைத் தெரிந்து, சிறிது சிறி தாக வரி வசூல் செய்யும் மன்னன் நீண்ட நாள் ஆள்வான். மகிழ்வாக வும் வாழ்வான்.

மக்கள் குறைகளை உணராமல், கொடிய வரிகளை நிறைய விதித்துக் கெடுபிடியாக வசூல் செய்யும் மன்னன் யானையால் மிதிபட்ட விளைநிலம் போல் விரைவிலேயே அழிவான்!

- புறநானூறு பிசிராந்தையார்

---

புருக்கும்போதே செம்பர குருக்களுக்குப் பளிச்சென்று விஷயம் தேங்காய் உடைத் தாற்போல் தெளிவாகி விட்டது.

செம்பர குருக்கள் அப்பாவி யல்ல. அந்த ஊரில் விக்கிரகக் களவு... இந்த ஊரில் விக்கிரகக் களவு என்று பத்திரிகைச் செய்திகளை அவர் பார்ப்பதுண்டு.

சொடுக்கிவிட்ட பின்னலில் கம்பளியைப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருக்கும் செண்பகராமனைப் பார்த்தார். அவன் காலை யிலே வந்தது. எழுந்து எழுந்து போய் மூலைக்கு மூலை உட்கார்ந்து பொழுதெல்லாம் பேசியது எல்லாமே எவ்வளவு மாயப் பிரமை என்ற மாதிரி ஒரு திகில் பிடித்துக் கொண்டது.

ஒரு மின்னல். இடிடாய்த்துக் கொண்டு இடி. உயிர் ஒலி எழுந்துகொண்டிருந்த எதிரும் புதிருமான அந்தத் திண்ணைகளில் இப் போது ஆளின் உட்கார்ந்திருப்பதைப்

போன்ற மௌனம். சரசரவென்று வானிலிருந்து சர்ப்பமாய்ச் சீறிக் கொண்டு அருகே எங்கோ ஒரு மின்னல் இறங்கிற்று. தொடர்ந்து நெடுங்கால வன்மம் போன்று நீளமாகத் தொலை தூரம் உருண்ட இடி.

"என்ன செலம்பரம் பேசத் துப் போனே?" செண்பகராமனே தைரியமாக ஆரம்பித்தான். குரலில் ஒரு கள்ளப் பயப்பு. குருக்களுக்கு உடம்பு நடுங்கிற்று.

"உனக்கெதுக்குச் செம்பகம் சிலே?" அப்பாவி போல் கேட்டார் குருக்கள்.

"எனக்கெதுக்கு? நான் என்ன கோவிலைக் கட்டிக் கொளத்தை வெட்டிக் கும்புடப் போறனு? இவ்வளவு லெச்சணமான சிலைன்னு அமெரிக்காவிலேயும் பிரான்ஸிலேயும் ஆலாப் பறக்கிறாங்க. லட்சம் கொடுப்பேங்கறான்."

"அவங்களுக்கு எதுக்கு?"

"கலையை ரசிக்கிறாங்க. வச்ச வச்சமா அதுக்காக கிடாசத் துடிக்கறாங்க."

"லட்சத்தைக் கிடாசி நம்ம ஸ்வாமியைப் பேத்துக்கிட்டு வாடா ரசிக்கிறேங்கிறான்?"

"ஒனக்குத்தானே இது சாமி? அவனுக்கு இது அளகு. நீ சாமியைக் கும்பிடுதே! அவென் அளகைக் கும்பிடுதான்! பாக்கப் போனா ஒன்னையே விட அவன் இதை ரொம்பக் கவுரவமா வச்சுக் காப்பாத்துவான்."

குருக்களுக்கு மனம் விதிர் விதிர்த்தது. என்ன வார்த்தையை எவ்வளவு வக்கனையாகத் தர்மத்தின் அதிகாரத்தோடு பேசுகிறானே என்ற அச்சம்.

படபடவென்று வாசலில் போட்டிருந்த கருங்கல்லில் மழைத் துளிகள் மோதும் ஓசை. இறக்கையைத் தாழ்த்திக்கொண்டு 'இங்கேதான் இறங்கப் போறேன்' என்று பருந்து ஆவேசத்தோடு மழை ஆரம்பித்தது. தெம்பர குருக்கள் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"செலம்பரம், என்னலே பேச்சு மூச்சைக் காணம்?"

அவனை உற்றுப் பார்த்தார் குருக்கள்.

"பயம்மா இருக்கா? ஒம்பேரிலே பழி வராமே நான் பாத்துக்குறேன். செலையைப் பேத்துக்கிட்டு நகந்தப்புறம் செம்பகராமன் பின்னே உடையம்னு ஒரு பத்தாயிரத்தைக் கொடு. வேற செலை அமைச்சப்புடு. இந்தப் போலீசு, பொட்டலங்காயெல்லாம் வலையை விரிக்குறதுக்கு முன்னாடி செலை இந்த 'கன்ட்ரி'யை விட்டே பறந்துடும்."

குருக்களுக்குத் திடீரென்று சிரிப்பு வந்தது. என்ன அப்பாவி நம்பிக்கை இவனுக்கு! ஒரு அக்ரிமெண்டு பேசுவது போல் சாவதானமாக வளர்த்துக் கொண்டிருக்கிறானே? ஒருவேளை இந்த தொழிலில் சடுபட்டு மனம் காய்த்துக் காய்த்து வைரமேறிய உரமோ? சட்டென்று சிரிப்பு வற்றிற்று. மார்பே இளை இளையென்று நெகிழ்ந்த பரிதாபம். இவ்வளவு துணிச்சலாகப் பாவ பயமின்றி.... இவன் முடிவு... ஐயோ!

"வாயைத் தொறந்து சொல்லுலே!"

"முடியாது செம்பகம்."

"என்னது? நல்லா ரோசிச்சுச் சொல்லு."

"யோசிச்சாலே பாவம். பெத்த தோப்பனையும் தாயையும் களவாடிண்டு வா. வெளி நாட்டிலே இருக்கிறவாளுக்கு வேடிக்கை காட்டறேன்னு சொல்ற சங்கதியா இருக்கே!" என்ன பைத்தியக்காரத்தனமாக இவனுக்கு இதற்குப் பதில் வேறு சொல்லிக் கொண்டிருக்கிறோம் என்று வியந்தார் குருக்கள்.

"சரி. விட்டுத் தள்ளு. ஒம் பிரியம்!" விசுக்கென்று படுக்கையில் கம்பளியைப் போர்த்திக் கொண்டு படுத்தான் செண்பகராமன்.

மழை பலத்தது. பேசினாலும் கேட்காத இரைச்சல். திண்ணைக்கு மறைப்பாகக் கூரை சார்ப்பு இறங்கி யிருந்ததால் எந்த மழைக்கும் சாரல் அடிக்காது.

குருக்களுக்குத் தூக்கம் வரவில்லை. மனப் புழுக்கம்.

'இதற்காகவா இங்கே வந்தாய்? இதற்காகவா உறவு சொல்லிப் பழைய கதைகள் பேசி என்னை ஏமாற்றினாய்? செண்பகராமா! உன்னைச் சந்திக்காமல் இருந்தாலே உன்னைப் பற்றிக் கவலையில்லாமல் பழசை நினைக்கிற காலத்தில் சிரித்திருப்பேனே! என்ன தைரியம்! என்னை அவ்வளவு அப்பாவி யென்று கணக்குப் போட்டு விட்டாய்? அடப்பாவி!'

மழை உக்ரக் களியோடு விளாசிற்று. பிரளயத்தைக் கோடி காட்டும் உற்சாகம். தெருவில் சற்று நேரத்தில் வெள்ளம் ஓல மிட்டது. பக்கத்துத் தென்னை மரங்கள் தலைவிரி கோலமிடும் சுருதி.

குருக்கள் வெகு நேரம் விழித்திருந்தார்.

மழை தணிந்து கொண்டு வந்த பின்னிரவு. இருள் அடைத்து மூடிக் கிடந்தது.

செண்பகராமன் விழித்திருந்தான். உறக்கம் கலைந்து வெகு நேரமாகப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான்.

சாலையில் ஒரு கார் ஹாரன் அடிக்கும் ஓசை கேட்டது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

"செலம்பரம்!" என்று கூப்பிட்டான்.

கம்பளிக் குவியலிலிருந்து பதில் வரவில்லை. நல்ல உறக்கம் போலிருக்கிறது.

"செலம்பரம்!" என்று இன்னொரு தடவை கூப்பிட்டு விட்டு, மேல் துண்டைத் தலைக்குப் போர்த்திக் கொண்டு, முழங்கால் வரை ஓடும் தெரு வெள்ளத்தில் வேஷ்டியைத் தூக்கியவாறு மெதுவாக நடந்தான்.

சாலையில் நின்றிருந்த காரின் ஹெட் லைட்டுக்கள் எரிந்தன. துண்டை வீசிச் சமிக்ஞை காட்டினான். கார் கதவைத் திறந்து கொண்டு மூன்று பேர் பருமனாக இறங்கினார்கள்.

"தயாரா?"

"ஆயுதம் கொண்டு வந்திருக்கியா?"

"ஓ..."

காருக்குள் திரும்பி இரண்டு கடப்பாறை களை எடுத்துக் கொண்டு செண்பகராமனைத் தொடர்ந்தனர் மூவரும்.

"குருக்கள் வீட்டைத் தாண்டித்தான் கோவிலுக்குப் போக வேண்டும்."

செண்பகராமன் வீட்டு வாசலைத் தாண்டும்போது பின்னால் வந்தவர்களைக் கையமர்த்திவிட்டு, "செலம்பரம்" என்று ஒரு குரல் கூப்பிட்டுப் பார்த்தான். பதில் வரா




உயர்வின் சின்னம்

(Estd.: 6-1-1947)

# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்

பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:
திருநெல்வேலி - 6 போன்: 274

மத்திய அலுவலகமும், முதலீடுகள் பெற்றுக்கொள்ளுமிடமும்:
36 - B. மவுண்ட் ரோடு (ஸ்பென்சர் & கம்பெனி எதிரில்)
சென்னை - 2 போன்: 84244

புதிய கிளையுடன் செயல்படுகிறது

தணிக்கைக்குட்பட்டு 31-3-1969ல் அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 5 லட்சம்
மொத்த ஆஸ்திகள் 2.07 கோடி. சீட்டில் ஈடுபடுத்திய தொகை ரூ. 4.12 கோடி
செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வும் 1.88 லட்சம்

கல்கத்தா ரிசர்வ் பாங்க், பாங்க் அல்லாத நிதி கம்பெனிகள் டிபார்ட்மெண்ட்
29-10-66ல் வெளியிட்ட நோட்டிபிகேஷன் DNBC 1/ED (S) 66/-
பாரா 2 (i) (f)ன் ஸப்கிளாஸ் (x)ன் படி

**கேரண்டி செய்த லோன் வாங்கப்படுகிறது**

| தவணை | வட்டி விகிதம் ரூ. 500-லிருந்து ரூ. 5,000 வரை | ரூ. 5,000-க்கு மேல் |
|---|---|---|
| ஒரு வருடம் | $8\frac{1}{2}\%$ P. A. | 9% P. A. |
| இரண்டு வருடம் | 9% P. A. | $9\frac{1}{2}\%$ P. A. |

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி செக்குகள் அனுப்பப்படுகின்றன. அவைகளை எங்கள் எந்தக் கிளையிலும் ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம்.

**தொழில் விபரம்**

பிரதி மாதம், மாதம் மும்முறை, தினசரி உள்ள ஏலச் சீட்டுகள் நடத்துதல். ரூ. 10,000 வரை மதிப்புள்ள ஏலச் சீட்டுகள் எங்கள் 31 ஆபீஸ்களிலும் நடத்தப்படுகின்றன.

**அலுவலக நிர்வாகம்**

மானேஜிங் டைரக்டர்:
ஸ்ரீ AR. ராமசாமி,

டைரக்டர்கள்:
ஸ்ரீ M. A. M. கோவிந்தன் செட்டியார்
ஸ்ரீமதி RM. மெய்யம்மை ஆச்சி

மத்திய அலுவலக மானேஜர்:
ஸ்ரீ K. A. ராம், பி. ஏ., பி. எல்.

கடந்த மூன்று வருடங்களின் ஆதாயமும் டிவிடெண்டும்:

| வருடம் | வரிப் பாக்கி பத்திருக்கும் லாபம் | வரி செலுத்திய பின் லாபம் | டிவி டெண்ட் விகிதம் |
|---|---|---|---|
| 1965-66 | 61908-72 | 25170-72 | 15% |
| 1966-67 | 79666-41 | 27666-41 | 16% |
| 1967-68 | 89468-58 | 28468-58 | 17% |

**பொறுப்புகள் 31-3-1968**

| | |
|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வ் நிதி | ரூ. 1,40,875 |
| பிக்ஸட் டிபாஸிட் | ரூ. 8,42,575 |
| ஷேர் ஹோல்டர் டிபாஸிட்டுகள் | ரூ. 2,75,050 |
| காரண்டி செய்த லோன்கள் | ரூ. 10,33,475 |
| தற்காலிக் கடன் | ரூ. 1,15,091 |
| சீட்டு இதர பொறுப்பு வகைகள் | ரூ. 1,33,79,414 |
| மொத்தம் | ரூ. 1,52,86,580 |

புதிய M. குரூப் ரூ. 25,000 மதிப்புள்ள சீட்டுகள் எங்கள் 12, கிலேதார் தெரு, திருச்சி (போன்: 4276)யிலும், 43, விநாயகநாதராவ் ரோடு, மாதவநகர், பெங்களூர்-1 (போன்: 73955)லும் நடைபெறும்.
ஆடிட் செய்த பாலன்ஸ் ஷீட்டுகள் வேண்டுபவருக்கு அனுப்பப்படும்

K. A. ராம், பி.ஏ., பி.எல்.
மத்திய அலுவலக மானேஜர்

V. மல்லையா, எம்.ஏ., பி.எல்.
பொதுஜனத் தொடர்பு அதிகாரி

AR. ராமசாமி
மானேஜிங் டைரக்டர்

அனுமதித்த தேதி: 7-4-69

PARAMOUNT



குணம், பலம், உறுதி

# சங்கர் சிமெண்ட்

இப்பொழுது சுலபமாகக் கிடைக்கிறது.




**இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட்**

சென்னை-2

தொழிற்சாலைகள்: சங்கர் நகர். சங்கரி

Criterion - ICT 2147 TM

மற்போலவே திருப்தியோடு சைகை செய்து விட்டுக் கோவிலை நோக்கி நடந்தான்.

கோயிலுக்குள் வெள்ளக்காடாக மழை நீர் தேங்கி யிருந்தது. சளப் சளப்பென்று நீர் கால் நடையில் ஓசை யிட்டது.

''இப்படி வாங்கலே!'' என்று முன்னால் போனவர்களை முருகன் சன்னதிப் பக்கம் அழைத்துச் சென்றான்.

''டார்ச்சை அடிங்க.''

டார்ச் எரிந்தது.

''எலே ராமசாமி, கடப்பாறையைக் கொண்டாடா!''

டார்ச் திரும்பிய கோணத்தில் முருகன் சிலைக்கு அடியில் குண்டுக் கட்டாக ஏதோ விழுந்து கிடப்பது தெரிந்தது.

''ஆரோ ஆளுங்கண்ணே... டாய்!'' கூட வந்த ஆள் கத்தினான்.

டார்ச் முகத்தை வெட்ட வெளிச்சமாக்கிற்று. சிதம்பர குருக்கள், ''எதிர்பார்த்தேன் செம்பகம்! நீ எந்தப் பாதகத்துக்கும் துணிஞ்சுடுவேன்னு. நீ என்னியேக் கேட்டப்பவே முடிவு பண்ணிட்டேன். அதான் தயாராகக் காத்திருக்கேன்'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து நின்றார்.

''ஒதுங்கடா அவனே'' என்று கூட வந்த ஒருவன் பாய்ந்தபோது செண்பகராமன் கையமர்த்தினான்.

''செலம்பரம்! நாங்க துணிஞ்சுட்டோம். ஒன் உசிரைக் காப்பாத்திக்கனும்னு நகரு'' —அதட்டிப் பேச முடியாமல் குரல் தானாகத் தணிந்தது.

''நீங்க என்னங்கண்ணே! சாச்சிக்கு ஆளை வுட்டுப் போகனுமோ. லேசா ஒரு தட்டு. கப் சிப்புன்னு காரியமாகும்.''

''எலே, எல்லாம் எனக்குத் தெரியும்'' என்று அதட்டினான் செண்பகராமன்.

சிதம்பர குருக்களுக்குச் சிறிதும் நடுக்கமில்லை. பயந்து பயந்து அந்த எல்லையே கடந்த மாதிரி ஒரு திடம். கையும் காலும் சன்னதம் வந்து புதிதாக ஆனை பலம் நுழைந்த மாதிரி விறைத்து நின்றன.

''செலம்பரம்!'' என்று செண்பகராமன் மீண்டும் எச்சரித்தான்.

சட்டென்று கீழே கிடந்த ஒரு கடப்பாரையைத் தூக்கிக் கொண்டார் குருக்கள்.

''என் ஒடம்பிலே உசிர் இருக்கிற வரைக்கும் ஸ்வாமியை நீங்க தூக்கின்டு போக விடமாட்டேன்.''

கடப்பாறையோடு அவர் நின்ற கோலத்தைப் பார்த்து யாரோ ஒருவன் பரிகாசமாக நகைத்தான்.

''குருக்களுக்கு ஆங்காரத்தைப் பாருடா!''

செண்பகராமன் குரலில் உறுதி உயர்ந்தது.

''செலம்பரம் வெளையாடாதே. இவனுங்க கொலை பாதகத்துக்கும் துணிஞ்சவனுங்க.''

''இருக்கட்டுமே; நானும் துணிஞ்சுட்டேன். என் ஸ்வாமியை எவனும் களவாட விட மாட்டேன்.''

''என்னண்ணே அவருகிட்டப் பஞ்சாயத்து?''

''செம்பகம்! ஸ்வாமியைத் தொட்டா, நானே அதை ஒரே யடியிலே நொறுக்கிடுவேன். நீ எந்தச் சீமைக்கும் அதை தூக்கின்டு போய் விக்க முடியாது: என் ஆதீனத்திலே என் சிறேஷ்டன் சிலையைத் திருடின்டு போறான்கிற கெட்ட பேரைவிட ஸ்வாமியை அழிச்ச நானும் தலையை மோதின்டு செத்துப் போறது மேல்.''

அவர் மிரட்டவில்லை. குளிர் வஜ்ஜிரமாக நெஞ்சக் குகை பிளந்து நரசிம்ம ருத்ரத்துடன் வருவது போன்று கனகனத்தது. செண்பகராமன் தயங்கி நின்றான்.

''நீங்க என்னே அடிச்சுக் கொன்னுக்கூடச் சரி. இதை நீங்க உருவாத் தூக்கிட்டுப் போக முடியாது!''

சிதம்பர குருக்கள் சர்ப்பம் போன்று சீற்றத்தோடு, துளி அசைவையும் கிரகிக்கும் உஷாரோடு நின்றார்.

''செலம்பரம்! இது நீ தொட்டுக் கழுவிக் கும்பிட்ட சாமியே. இதையா ஒடைப்பேங்கறே...''

''ஆமாம், இது என் சுவாமி! என் சுவாமி! இருபது வருஷம் என் ஆத்மாவையே நைவேத்தியம் பண்ணிக் கும்பிட்ட சாமி. இதைச் சீமையிலே வேடிக்கை காட்டக் களவு கொடுக்கிறதை விட, இதை தூளியாக்கிட்டு, நானும் அழிஞ்சுடறது மேல். செம்பகம்...''

''செலம்பரம்...'' என்று செண்பகராமன் ஏதோ சொல்ல வாயெடுத்தபோது பளீரென்று வானத்திலிருந்து கண் பார்வையைப் பிடுங்கி எறிவது போன்று சந்நிதிக்கு நேரே ஓர் ஒளி. கடகடவென்று பயங்கரப் பேரோசை. ஒளிப் பிரளயம். ஒரு விநாடியில் மடமடவென்று இடித்து ஏதோ சரியும் ஓசை. அடுத்த கணம்...

''ஐயோ!''

செண்பகராமனின் கையிலிருந்த டார்ச் வேகமாக உருண்டு சிதம்பர குருக்களின் காலடிக்கு வந்தது.

என்ன நடந்ததென்றே புத்தியை வெகு நேரம் நிதானிக்க முடியவில்லை.

''இடி... இடி'' என்று பீதியோடு உளறிக் கொண்டே சளப் சளப்பென்று தண்ணீர் தெறிக்கக் கூட வந்த நபர்கள் தலை தெறிக்க ஓடும் ஓசை கேட்டது.

அப்புறம்தான் சிதம்பர குருக்களுக்கு சித்த ஸ்வாதீனம் வந்தது. உடம்பு வெட வெடவென்று நடுங்க டார்ச்சை எடுத்துத் திருப்பினார்.

வாயில் ரத்தம் ஒழுகச் செண்பகராமன் அலமாக விழுந்து கிடந்தான். முதுகின் மேல் பெரிய பாறுங்கல் பாளம்.

''முருகா!'' என்று கூவிக் கொண்டே டார்ச்சை விதானத்துக்கு உயர்த்தினார். வெகு நாட்களாக விழுந்து விடுவேன் என்று எச்சரித்துக் கொண்டிருந்த விதானத்தின் வழியே பெரிய துவாரம். வானம் தெரிந்தது. கல்லும் மண்ணும் இன்னும் சரிந்து கொண்டிருந்தன.

''செம்பகம்!'' என்று அலறினார் குருக்கள்.

முகமும் கைகளும் உயிரின் அந்திமத் துடிப்போடு நடுங்கச் செண்பகராமன் எதிரே செத்துக் கிடந்தான்.

''முருகா!'' என்று கதறிக் கொண்டு மூர்த்தியின் பாத கமலங்களில் தலையை மோதிக் கொண்டே குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினார் சிதம்பர குருக்கள்.

# எங்கும் காலேஜ் அட்மிஷன்...



"ஏண்டி, உனக்குத்தான் காலேஜ் அட்மிஷன் கிடைச்சடுத்தே! கொஞ்சம்கூடச் சந்தோஷப்படாமல் இப்படி..."

"இல்லே... வந்து அப்பாவுக்கு ஹார்ட் ரொம்ப 'வீக்'! அட்மிஷன் கிடைச்சடுத்துன்னு அவரிடம் எப்படிச் சொல்றது?"

★

"'எப்படி' வரிசையில் புதுசா ஒரு புத்தகம் எழுதி இருக்கிறேன். 'காலேஜ்' அட்மிஷனுக்குச் சிபாரிசு வாங்குவது எப்படி'ன்னு தலைப்பு!"















என்பதே பேச்சு!



"ஹி... ஹி... ஹி... பையனுக்குக் காலேஜ் அட்மிஷன்..."

"ஒரு ஸீட்தான் இருக்கு. என்னை என்ன பண்ணச் சொல்றீங்க!"

★

"வரதட்சிணை பதினையாயிரத்துடன் மாப்பிள்ளையின் தம்பிக்குக் காலேஜ் அட்மிஷனும் வாங்கிக் கொடுத்தால்தான் கல்யாணம் நடக்குமாம், என்னை என்ன பண்ணச் சொல்றேன்?"



காற்றோட்டமுள்ள பாடா ஸாண்டல்களையும் செருப்புகளையும் அணிந்திருக்கையில் உங்கள் பாதங்கள் இலேசாகவும் குளுமையாகவும் இருப்பதை உணர்வீர்கள். ஒழுங்காகவும் ஒல்லியான ஸ்டைலோடும் இருப்பதிலிருந்து நாள் முழுவதும் உங்கள் பாதங்கள் புத்தம் - புதிதாக இருக்கும்வகையில் இவை டிஸைன் செய்யப்பட்டிருப்பதையும் நீங்கள் நன்குணர்ந்துகொள்ள முடியும். மென்மையும் வளையக்கூடியதுமான இவற்றின் மேல்பாகம் உங்கள் பாதத்தில் பட்டதுமே உங்களைக் கவர்ந்துவிடும். ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் மெது நடைக்கான பாத மெத்தைகள் இவை. இங்கே காட்டப்பட்டிருக்கும் ஸ்டைல்கள் உங்கள் பிரியமுள்ள பாடா ஸ்டோரில் கிடைக்கின்ற இளமை மோஸ்தரில் கவர்ச்சிகரமான பலவகைகளில்சில. இன்றே ஒரு ஜோடி வாங்கி அணிந்து பாருங்கள்!

## குளுமையாக வைத்துக்கொள்ளுங்கள் கோடையிலே இலேசான பாதங்களுடன் செல்லுங்கள் !


கிரண் 6.50


ஸாவித்ரா 9.50

**Bata**


சாயா 14.95


ஸாந்தீப் 11.50


ஸ்வபன் 8.50


[illegible] 17.95

## பென்சில் மரம்!



கொச்சிக்குப் பக்கத்தில் ஒரு தாயும் மகனும் ரயில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். ஜன்னல் ஓரம் சிறுவன் அமர்ந்து வெளிப்புற இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்து வந்தான். அடர்த்தியான மரங்களைப் பார்த்துத் தாய் மகனுக்குக் காண்பித்து, "இவைதாம் ரப்பர் மரங்கள்" என்று விளக்கினாள். சிறுவனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. முகத்தில் மகிழ்ச்சி நிலவியது. சற்று நேரம் யோசித்துவிட்டு "அம்மா! பென்சில் மரங்கள் வரும்போது எனக்குக் காண்பிக்கிறாயா?" என்று கேட்டான்! ஆதாரம்: பெமினா தகவல்: சுதாகரன்

## குட்டிக் கதை!

ஒரு சர்க்கஸ் கொட்டகையின் நுழைவாயிலில் கூட்டமாக நின்றுகொண்டிருந்த சிறு பையன்கள் ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக் கொண்டு உள்ளே பார்க்க முயன்று கொண்டிருந்தார்கள். பக்கத்தில் நின்ற பெரியவர் ஒருவர் இதையே பார்த்துக் கொண்டிருந்தார்.

ஏதோ யோசித்த அவர் 'டிக்கட்' வாங்கிக்கொண்டு உள்ளே விடும் ஊழியரிடம் வந்து டிக்கெட்டுடன், "இந்தப் பையன்களை உள்ளே அனுப்புங்கள். எத்தனை சிறுவர்கள் என்று எண்ணிச் சொல்லுங்கள்" என்றார்.

ஊழியரும் எண்ணிக்கொண்டே ஒவ்வொருவராக உள்ளே அனுப்பி விட்டு, பெரியவரை நோக்கி, "இருபத்தொரு சிறுவர்கள் இருக்கிறார்கள்" என்றார்.

உடனே அந்தப் பெரியவர், "நான் சரியாகத்தான் யூகித்திருக்கிறேன்" என்று கூறிக் கொண்டே புன்முறுவலுடன் அவ்விடத்தை விட்டு அகன்றார்.

ஊழியர் முகத்தில் ஈயாடவில்லை. -'மணி'





## நாணயத் திருடன்!

எங்கள் காலனியில் எங்களுக்கு அருகில் வேறு கட்டிடத்தில் வசிக்கும் என் தோழியின் வீட்டில் நடந்த உண்மைச் சம்பவம் இது. ஐந்து மாதங்களுக்கு முன் அவள் வீட்டு அலமாரியில் வைத்திருந்த கைப் பையிலிருந்து நூறு ரூபாய் நோட்டு ஒன்று மட்டும் காணவில்லை. மீதி ஐந்து பத்து ரூபாய் நோட்டுகள் அப்படியே இருந்தன. அவர்கள் ரூபாய் எப்படித் தொலைந்து போயிருக்கும் என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். வீட்டில் வேலையாள் ஒருவரையும் வைத்துக் கொள்ளாததால் எவர் மீதும் சந்தேகப்பட முடியவில்லை. இரண்டு நாட்களுக்கெல்லாம் ஜன்னலடியில் ஒரு காகிதம் கிடந்தது. அதில் "நான் திருடனில்லை. மிக இக்கட்டான நிலையில் ரொம்பவும் அவசரமாகப் பணம் தேவைப்பட்டதால் உங்கள் வீட்டிலிருந்து எடுத்து விட்டேன். மாதா மாதம் கொஞ்சம் கொஞ்சமாக உங்கள் பணத்தைக் கொடுத்து விடுவேன்" என்று தமிழில் எழுதியிருந்தது. எழுதியவர் யாரென்றே அறிய முடியவில்லை. எழுதியபடியே அடுத்த மாதம் ஒரு நாள் அவர்கள் வீட்டு ஜன்னலின் தரையில் எழுத்து இல்லாத வெறும் கவரில் ரூ. 30 கிடந்தது. தொடர்ந்து அடுத்த மாதங்களில் ரூ. 30ம், பிறகு இரு முறை ரூ. 20மாக அவர்களுடைய பணம் முழுவதும் திரும்பக் கிடைத்து விட்டது. இந்த மாதம்தான் அவர்களுடைய பணத்தின் கடைசித் தவணை கிடைத்தது. யார் இந்த நாணயமான திருடன் என்று ஒருவராலும் கண்டுபிடிக்க முடியவில்லை.

தகவல்: சரோஜா நரசிம்மன்

## பெரியார் கவனிக்க!

பூந்தமல்லி நெடுஞ்சாலையில் போன ஒரு லாரியின் பட்டடி வைத்திருந்த பெட்டிமீது 'என்னைத் தினமும் கவனி' என்று எழுதியிருந்தது.

திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ், கொச்சி எக்ஸ்பிரஸ் முதலானவை பார்த்திருப்பீர்கள். 'வெங்காய எக்ஸ்பிரஸ்' தெரியுமா? அந்தப் பெயரில் ஒரு லாரி பூந்தமல்லி நெடுஞ்சாலையில் அடிக்கடி செல்வதைப் பார்க்கலாம்! -'பாபு'



அண்ணலின் வாழ்விலே..

# ஏழைத்தாய்!

குஜராத் ராஜ்யத்தில் உள்ள மரோலிக்கு கஸ்தூரிபா சென்றிருந்தார். சேவாகிராமத்துக்குத் திரும்பி வருவதாகக் குறிப்பிட்டிருந்த நாளன்று காலையில் அவரைச் சந்தித்து அழைத்து வருவதற்காக, ஆசிரமத்திலுள்ள ஒரு சகோதரி, ரயிலடிக்குச் சென்றிருந்தார். ஆனால் அந்த ரயிலில் கஸ்தூரிபா வரவில்லை. ஏமாற்றத்துடன் ஆசிரமத்துக்குத் திரும்பிய அந்தச் சகோதரி காந்திஜியைச் சந்தித்து, கஸ்தூரிபா வரவில்லை என்ற செய்தியைத் தெரிவித்துவிட்டு, ''சாயங்காலம் வரும் வண்டியில் நிச்சயம் வந்துவிடலாம் அல்லவா?'' என்று கேட்டார். மாலையில் வந்து சேரும் வண்டியில் பிரயாண நேரம் குறைவு என்றாலும், அது துரித வண்டி ஆகையால் பயணக் கட்டணம் அதிகம்.

காந்திஜி சொன்னார்: ''பா பணக்காரத் தாயார் என்றால் மாலை வண்டியில் வந்துவிடலாம். ஏழையின் தாயார் என்றால் சூரத் சென்று அங்கிருந்து தப்தி பள்ளத்தாக்கு ரயில் மார்க்கமாகப் பயணம் செய்து, நாளைக் காலையில்தான் இங்கு வந்து சேருவார்.''

காந்திஜி குறிப்பிட்ட மார்க்கத்தில் பயணம் செய்த கஸ்தூரிபா மறுநாள் காலையில்தான் சேவாகிராமத்துக்கு வந்து சேர்ந்தார்.

## செயல் வேண்டும்

மகன்வாடியில் காந்திஜி தங்கியிருந்த காலத்தில் ஆசிரமத்துக்குத் தேவையான எண்ணெயைச் செக்கில் ஆட்டிக் கொள்வது வழக்கம். ஒரு நாள், எள்ளைச் சுத்தம் செய்யும் பொறுப்பு கஸ்தூரிபாவுக்குக் கிடைத்தது. அவர் மகிழ்ச்சியுடன் அந்த வேலையைச் செய்தார். என்றாலும் கண் பார்வை மங்கியிருந்ததால் எள்ளுடன் கலந்து கிடக்கும் மிகச் சிறு கரம்புக் கட்டிகளைப் பொறுக்குவதற்குச் சிரமப்பட்டார். அதனால் சமையலறையை நிர்வகித்து வந்த பல்வந்த் சின்ஹா ஒரு வேலைக்காரியை அனுப்பி வைத்தார்.

அந்த அறைக்கு வந்த காந்திஜி, ''இந்தப் பெண் ஏன் இங்கு வேலை செய்கிறாள்? இந்த வேலையைச் செய்யும்படி பாவை அல்லவா பணித்தேன்?'' என்றார்.

பல்வந்த் சின்ஹா தயக்கத்துடன் வந்து, ''எள்ளுடன் கலந்து கிடக்கும் மிகச் சிறிய கரம்புக் கட்டிகளைப் பொறுக்குவதற்கு பா சிரமப்பட்டார். இந்த வேலையைச் செய்வதற்குக் கூலியும் அதிகம் இல்லை, ஆகையால் வேலைக்காரியை அமர்த்தினேன்'' என்றார்.

''நாம் சிக்கனமாக வாழ்ந்தால்தான் அதைப் பிறருக்கு உபதேசம் செய்யலாம். மற்றவர்களால் முடியவில்லை என்றால், என்னுடைய வேலைகளை ஒதுக்கிவிட்டு, நானே இதைச் செய்கிறேன்'' என்று கூறிக் காந்திஜி முறத்தை எடுத்துத் தாமே எள்ளைச் சுத்தம் செய்யலானார்.

அடுத்த கணமே கஸ்தூரிபா அவர் கையிலிருந்த முறத்தைப் பறித்துக்கொண்டு, ''நானே செய்கிறேன், உங்களுடைய வேலையைக் கவனிக்கச் செல்லுங்கள்'' என்றார்.

பாபு எழுந்தார். பா எள்ளைச் சுத்தம் செய்வதில் ஈடுபட்டார்.

## சிறையில் உபவாசம்

திருமணச் சட்டத்தை எதிர்த்துப் போராட்டம் தொடங்கிய கஸ்தூரிபாவையும் மற்றப் பெண்களையும் கைது செய்து வாக்ஸ்ரஸ்ட் சிறைக்கு அனுப்பினார்கள். அங்கு உணவு வசதி சரியாக இல்லாததால், அவரையும் மேரிட்ஸ்பர்க் சிறைக்கு மாற்றினார்கள். சிறையில் பழங்களைத் தவிர வேறு எதையும் உண்பதில்லை என்றும் சிறை அதிகாரிகள் பழங்களை வழங்க மறுத்தால் உபவாசம் ஏற்பது என்றும் கஸ்தூரி பா உறுதி எடுத்துக் கொண்டார். ஆனால் சிறை அதிகாரிகள் இதைப் பொருட்படுத்தவில்லை.

கஸ்தூரி பா உபவாசம் ஏற்றார். அவர் மூன்று நாட்களாகப் பட்டினி கிடப்பதைக் கண்டு பரிதாபம் கொண்ட சிறைத் தலைவர், ''ஒருவேளை தேநீர் அருந்தாவிடில் நாங்கள் சோர்ந்து விடுகிறோம். ஆனால் பஞ்சை உடலுடைய நீ, பழங்கள்தான் வேண்டும் என்று மூன்று நாட்களாகப் பட்டினி கிடக்கிறாயே! மேலதிகாரிகளுடைய உத்தரவு இல்லாமல் உனக்குத் தனி வசதி வழங்க முடியாதே. என்ன செய்வது?'' என்றார். பா பதில் கூறவில்லை.



பா உபவாசம் தொடங்கிய ஐந்தாம் நாளன்று அவருக்கு — அன்றாடம் மிகக் குறைந்த அளவில் — பழங்களை வழங்கலாம் என்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்துள்ள செய்தி கிடைத்தது. அந்த உத்தரவுப்படி அனுமதிக்கப்பட்ட பழங்கள், ஒரு நேர உணவுக்குக் கூடப் போதாதவை. ஆயினும், பா அவற்றை ஏற்றுக் கொண்டு மூன்று மாதம் சிறை வாசம் செய்தார். தண்டனை முடிந்து வெளியே வந்தபோது, சிறைவாசலில் சந்தித்த காந்திஜி, அவரைப் பார்த்துக் கண் கலங்கினார். எளிதில் அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் இளைத்துப் போயிருந்த பாவை அன்புடன் வரவேற்று, ''எலும்பும் தோலுமாக இளைத்து விட்டாயே. முதுமை வந்துவிட்டது போலத் தோற்றம் அளிக்கிறாயே?'' என்றார்.

ஆயினும் பாவும் மற்ற இந்தியப் பெண்களும் சிறைவாச காலத்தில் காட்டிய தீரத்தையும் பொறுமையையும் மனத்துள் பாராட்டி மகிழ்ந்தார். —கே. எஸ். ஜே.




"ஸ்வீட் ஹனி! இன்னிக்கு 'மெட்ரோ'விலே 'கிளியோபாட்ரா'வுக்குப் போகலாமா? இரண்டு 'பால்கனி ஸீட் புக்' பண்ணிவிட்டேன்."

"தாங்க்யூ, மை டியர்!"

ஜலதரங்கத்தின் இசை போல், அந்தப் பெண்ணின் சிரிப்பு வந்து மோதியது.

"இன்னும் பத்தே நிமிஷம். அதற்குள்ளே நான் புறப்பட்டுவிடுவேன். ஆனால் சமையல்?"

"நோ, மை டார்லிங்! நீ சமைக்க வேண்டாம். சீக்கிரம் சினிமாவுக்குப் புறப்படு.... சாப்பாடு 'மாமியார்' வீட்டிலேதான்!" என்று ஏதோ ஜெர்ரி லூயிஸ் ஹாஸ்யம் அடித்தவன் போல் கடகடவென்று சிரித்தான் அவன்.

அந்தப் பெண்ணும்கூடச் சேர்ந்து சிரித்தாள். அந்தச் சிரிப்புக்குக் காரணம் இல்லைதான்! புதுக் குடித்தனம் தொடங்கியுள்ள இளம் தம்பதிகள் காரணம் இல்லாமலே சிரித்துக் குலுங்குவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது?

அவர்களுடைய பேச்சைக் கேட்டும் கேட்காமலும் நான் என் வேலையில் ஆழ்ந்திருந்தேன்.

எனக்குச் சென்னைக்கு மாற்றலான போது என் மனைவிக்கு ஆறும் மாதம்; நான்காவது பிரசவம்.

குடும்பக் கட்டுப்பாடு எனக்குத் தெரிந்ததுதான்! என்றாலும், ஆசைக்கு மூன்று பெண்களைப் பெற்ற பிறகு, நான்காவது குழந்தையாவது ஆண்பிள்ளையாக இருக்காதா என்ற சபலத்தில்தான் அந்த 'ரிஸ்க்' எடுத்துக் கொண்டேன். நமக்கு வாரிசு இருந்து அனுபவிக்கக்கூடிய அளவுக்கு ஆண்டிவிருக்கிறதா என்பது வேறு விஷயம்! அது கிடக்கட்டும் —

பிரசவ நாளை எண்ணிக் கொண்டிருக்கும் மனைவியையும் நண்டும் சிண்டுமான குழந்தைகளையும் சென்னைக்கு அழைத்து வரச் சௌகரியப்படாததால் நான் மட்டும் இந்த வீட்டிலே முன் பக்கத்து அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு தங்கியிருந்தேன்.

ஆபீஸ் வேலை முடிந்தபிறகு, இரவிலே பொழுதுபோக்காக, கதைகள் எழுதுவது என் வழக்கம். இரவுச் சாப்பாடு, ஹோட்டலிலிருந்து ஒரு பையன் கொண்டு வந்து வைத்து விட்டுப் போவான்.

நான் இருக்கும் வீட்டின் சொந்தக்காரருடைய ஒரே பையன், பம்பாயில் ஒரு பெரிய சோப் கம்பெனியில் அதிகாரியாக வேலையிலிருந்ததால் மகனோடேயே அவரும் மனைவியும் போய்த் தங்கி விட்டார்கள். காலியாகக் கிடந்த வீட்டின் முன்பக்கத்து அறை, ஒரு நண்பர் பெயரின் மூலம் எனக்கு வாடகைக்குக் கிடைத்தது. வீட்டின் மற்றப் பகுதியில் அந்த இளம் தம்பதிகள் போன மாதத்திலிருந்து குடித்தனம் ஆரம்பித்திருந்தார்கள்.

என் கதைகள் பத்திரிகைகளில் பிரசுரமாவதைப் பற்றி எப்படியோ தெரிந்து கொண்டிருந்த அந்த இளைஞன், அடிக்கடி என் அறைக்கு வந்து பேசிக் கொண்டிருப்பான்.

'அந்த எழுத்தாளரை எனக்குத் தெரியும்: அவர் என்னுடைய நண்பர்' என்று சொல்லிக் கொள்வதில் சிலர் பெருமையடைகிறார்கள் அல்லவா? இது இப்போது புதிய நாகரிகம்!'

அவனைப் பற்றியும் குடும்பத்தைப் பற்றியும் அவன் பேச்சிலிருந்து யூகித்துக் கொண்டேன். நேரடியாகக் கேட்பதுதான் 'நாகரிக'மில்லையே!

வெளிநாட்டுத் தூதர் காரியாலயம் ஒன்றில் வேலை பார்த்துக் கை நிறையச் சம்பளம் வாங்கும் ரவி, ஒரு தொழிற்சாலையில் 'ஸ்பெஷலிஸ்ட்'டாக இருக்கும் நிர்மலாவைக் காதலித்தானாம். அவர்கள் கல்யாணம் செய்து கொள்ளப் பெற்றோர்கள் சம்மதம் கிடைக்காததால், பதிவுத் திருமணம் செய்து கொண்டார்களாம். பட்டதாரிகளான அவர்களுடைய வாழ்க்கை மிகவும் இனிமையாக, குதூகலமாக, கேளிக்கையும் கும்மாளமுமாகப் பரிமளிப்பதைக் கண்டு மகிழ்ந்தேன் நான்.

'இனிய காதலர்களைக் கண்டு உலகமே மகிழ்ச்சியடைகிறது' என்று சொன்னானே, அந்த மேனாட்டுக் கவிஞன் வாயில் சர்க்கரை போடலாம்! எவ்வளவு உண்மை!

தினசரி இரவில் ஒன்றாய்த் தூங்கி, காலையில் ஒன்றாய் விழித்தெழுந்து ஒருவர்க்கொருவர் உதவி செய்து கொண்டு, சமையல் முதலிய எல்லா வேலைகளையும் சிரிப்பும் மகிழ்ச்சியும் கேலியும் அலைபுரண்டோட முடித்துவிட்டு, 'கிச் கிச்' என்று கீச்சிடும் சிட்டுக் குருவிகள் போல் வீட்டை விட்டு ஸ்கூட்டரில் ஜோடியாக ஆபீசுக்குப் போகும் அந்த அழகு இருக்கிறதே, ஆகா!

மாலையில் திரும்பி வந்ததும், 'டிரஸ்' செய்து கொண்டு பெரும்பாலும் வெளியே சென்று விடுவார்கள்.

இரவில், கிண்கிணி போல் சிரித்துத் துள்ளிக் கொண்டு அவர்கள் வீட்டுக்குள் நுழையும் போது, நான் என் அறைக்குள் இருந்தவாறு ஏதாவது எழுதிக் கொண்டிருப்பேன்; அல்லது ஊரிலுள்ள மனைவியையும் குழந்தைகளையும் நினைத்தபடி கூரை விட்டத்தைப் பார்த்துக் கொண்டிருப்பேன்.

வீட்டுக்குள்ளிருந்து அவர்கள் பேச்சு, நான் விரும்பா விட்டாலும் என் காதில் தாமாகவே விழுந்து கொண்டிருக்கும். நான் என்ன செய்வது? மிருகங்கள் போல் நாமும் நம் காதுகளைத் திருப்பிக் கொள்ள முடியுமா, என்ன?

'ஊடல், கூடல்' என்றெல்லாம் திருவள்ளுவர் சொல்லியிருக்கிறாரே. இவர்கள் வாழ்க்கையில் ஊடலே இல்லையா? அவர்கள் சண்டை போட்டுக் கொள்வதை நான் இது வரை கேட்கவே இல்லையே?

நானும் என் மனைவியும் எவ்வளவோ அன்யோன்யமாக அன்பு செலுத்துபவர்களானாலும் மாதத்துக்கு ஒரு சண்டை, வாரத்துக்கு ஓர் ஊடலாவது வருமே! ஒரு வேளை, இவர்கள் தங்கள் கோபத்தையும் கருத்து வேற்றுமைகளையும் வெளிக் காட்டாமல் உள்ளுக்குள்ளேயே அடக்கிக் கொண்டு விடுவார்களோ?

ஆகா, ரவி எவ்வளவு கொடுத்து வைத்தவன்! நிர்மலாதான் எவ்வளவு நல்லவள்! இதுவல்லவா ஆதர்ச இல்லற வாழ்க்கை!

இப்படி ரவி குடும்பத்தைப் பற்றி நினைத்து மகிழ்ந்து கொண்டிருக்கும் போதே,—

"சனியன்! ஏழரை நாட்டுச் சனியன்! அய்யனூர் கோயில் பிடாரி! இந்தப் பிசாசை எப்போது தொலைத்துத் தலை முழுகப் போகிறேனோ, தெரியலே..." என்று தலையில் ஓங்கி அடித்துக் கொண்டே உள்ளே நுழைவான் கந்தன்.

பம்பாய் சென்றுள்ள வீட்டுக்காரர், வீட்டைச் சுற்றிப் பாடுபட்டு அமைத்திருக்கும் குரோட்டன்ஸ், வாயில் நுழையாத பெயர்களுடைய 'பாடர்ன்' பூச்செடிகள் முதலியவற்றைக் கவனித்துக் கொள்வதற்காகக் கந்தனுக்கு அந்தத் தோட்டத்தின் மூலையிலே ஒரு குடிசை கட்டிக் கொடுத்திருந்தார்.

அங்கே அவனும் அவன் மனைவி வேலாயி மட்டும்தான். 'கண்ணாலம்' முடிந்து ஒரு வருஷம்தான் ஆகிறதாம். அந்த ஒரு வருஷத்தில் பாதி நாளாவது, "ஏன், இந்தச் சனியனைக் கட்டிக்கிட்டேன்?" என்று அவனும் அவளும் மாறி மாறிச் சொல்லிக் கொண்டிருந்திருப்பார்கள்!

தோட்ட வேலையை வேலாயியே கவனித்துக் கொண்டாள். கந்தன் எங்காவது கட்டடங்களில் சிற்றாள் வேலை செய்து பணம் சம்பாதித்து வருவான். கைநிறையச் சம்பாதிக்கா விட்டாலும், ஏதோ வயிறு நிறையக் கஞ்சி குடிப்பதற்குப் போதுமான வருமானம் இருந்தது.

பொழுது விடிந்து பொழுது போனால் அந்தக் குடிசையில் சண்டையும் கூச்சலும்



கேட்டுக் கொண்டேயிருக்கும். சிறு சண்டை யாக ஆரம்பிப்பது கொஞ்ச நேரத்தில் பெரிதாகி; இருவரும் வாயாலும் கையாலும் அடித்துக் கொண்டு கத்துவார்கள். அந்தப் 'போரி'லே வேலாயி தோல்வி அடைந்தால் உடனே அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக வக்கணையாக ஒப்பாரி வைத்துக் கொண்டு பக்கத்துத் தெருவிலுள்ள தோழியின் குடிசைக்குப் போய் விடுவாள். கந்தன் தோற்று விட்டால், என்னுடைய அறைக்கு வந்து அவளைப் பற்றி வசை புராணம் பாடிக் கொண்டேயிருப்பான்.

இந்த மாதிரி சண்டை பிடித்துக் கொள் கிறார்களே, இது எவ்வளவு நேரம் நீடிக்கு மென்று நினைக்கிறீர்கள்? அன்றைய இரவுக் குள்ளேயே பெரும்பாலும் 'போர்நிறுத்தம்' ஏற்பட்டுச் 'சமாதான 'உடன்படிக்கை' அமுலுக்கு வந்துவிடும்!

இரவு எனக்கு வரும் ஹோட்டல் சாப் பாட்டில் மிச்சம் வைத்துக் கந்தனுக்குக் கொடுப்பேன். வேலாயியைச் சபித்துக் கொண்டே சாப்பிடுவான்.

மனைவியைப் பற்றி வசைமாரி பொழிந்த வாறே படுத்துப் புரள்வான் கந்தன்.

கிட்டத்தட்ட நள்ளிரவு இருக்கும். என்னுடைய 'கோழித் தூக்கம்' ஏதோ பேச்சரவம் கேட்டு விழிப்புத் தட்டும்.

இருட்டிலே மெதுவான நடமாட்டம்.

''ஏனுங்க... இதுக்கெல்லாம் இப்படிக் கோவிச்சுக்கிடலாமா ?.... என்னங்க....''— மெதுவாகக் குழையும் குரல் ஒன்று.

''போமட, போமட.... புத்திகெட்ட சிறுக்கி!.... இதுலே ஒன்னும் குறைச்ச லில்லே.... க்கும்.... க்கும்...''—பேச்சிலே வேகம் குறைந்து முணுமுணுத்து முனகு வது ஆண் குரல்: பெண்மை குழையும் போது இயல்பாகத் தாழ்ந்து போகும் ஆண்மையின் பலவீனம்.

''சரி,சரி, எழுந்திரிச்சுச் சாப்பிட வாங்க.'' படுக்கையில் சலசலப்பு: அவன் கையைப் பிடித்துக் கெஞ்சுவாள் அவள்.

''....நான் சாப்பிட்டேண்டி ! நீ ஏன் சாப்பிடலே ? இத்தனை நேரம் நீ சாப்பிடாம இருந்தால் ஒடம்பு என்னத்துக்காகும், கழுதே!'' என்று செல்லமாகக் 'கழுதை'யை முதுகில் தட்டுவான் அவன். தொடர்ந்து வளையல் சத்தம் கலகல வென்று ஒலிக்கும்.

''...க்கும்.... கொஞ்சநாக்கு ஒண்ணும் பஞ்சமில்லே.... கோபம் மட்டும் மூக்கு நுனியிலே இருக்கும் போலிருக்கு....'' 'பெண்'ணுடைய அந்தரமான இனிமை குலுங்கும் சிணுங்கல்.

''ஏண்டி, நீ மட்டும் என்ன?'' — இருவரும் மெதுவாகச் சிரிக்கிற சத்தம் கேட்கும்.

விடியற்காலையில் பார்த்தால் —

கந்தனை என் அறையில் பார்க்க முடி யாது: குடிசையிலிருந்து தலையை நீட்டு வான் ! என்னைப் பார்த்ததும் ஓர் அசட்டு 'ஹி....ஹி' சிரிப்பு. நானும் பதிலுக்குப் புன் சிரிப்பு ஒன்றைக் காட்டுவேன்.

பாவம்! அவன் வாழ்க்கையில் ஏது நிம்மதி? இளைமும் சண்டை, சச்சரவு, ஏச்சு, பேச்சு ! இந்தவைப குடும்ப வாழ்க்கை எத்தனை நாள் நீடிக்கப் போகிறது?

என்றாவது ஒரு நாள் கந்தன், ''இன்னை யிலேயிருந்து நான் ஒன் புருஷனுமில்லே : நீ என் பெண்சாதியுமில்லே..... நீ யாரோ, நான் யாரோ....?'' என்று 'உண்மை' யாகவே சொல்லி விட்டுப் போகத்தான் போகிறான்!

என்றாவது ஒரு நாள் வேலாயி, ''ஒன் னோடு ஒருத்தி குடித்தனம் பண்ணுவாளா? இனிமே இந்தக் குடிசைப் பக்கம் தலை வைச்சுக்கூடப் படுக்க மாட்டேன். இது சத்தியம்'' என்று 'சத்திய'மாகவே சொல்லி விட்டுப் போகப் போகிறாள்!

பாவம், கந்தன்! பாவம், வேலாயி!

மாதங்கள் கடந்து சென்றன.

என் அருமை மனைவி என் ஆசையைப் பூர்த்தி செய்து விட்டாள்! தங்க விக்கிரகம் போன்ற ஆண் குழந்தையைப் பெற்றெடுத்த அவளையும் குழந்தைகளையும் அழைத்து வந்து வேறு வீடு பார்த்துக் குடித்தனம் வைத்தேன்.

அன்று ஒரு நாள் தற்செயலாக ஒரு கட்டடத்தின் முன்னால் கந்தனைச் சந்தித் தேன். தலையில் சுமந்த செங்கல்லோடு என்னைக் கண்டதும் ஓடி வந்தான்.

''சாமி! சௌக்கியங்களா ? புள்ளைகுட்டி அம்மா எல்லாம் சுகந்தானுங்களே?'' என்று ஆர்வத்தோடு விசாரித்தான்.

''எல்லோரும் சௌக்கியந்தான் கந்தா !'' என்று அவனோடு கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தேன். அடுத்து அவன் சொன்ன செய்தி என்னைத் தூக்கிவாரிப் போட்டது!

அந்த வீட்டில் குடியிருந்த ரவியும் நிர்மலாவும் பிரிந்து சென்று விவாகரத்து செய்து கொண்டு விட்டார்களாம். என்னால் அதை நம்பவே முடியவில்லை.

''நான்கூட முதல்லே நம்பவேயில்லே சாமி ! கொஞ்சங்கூடச் சண்டை வம்பு இல் லாம, சினிமாவிலே வர்ற 'ஹீரோ—ஹீரோயின்' ஜோடி கணக்கா ஒத்துமையாய் ஜாலியா யிருந்த அவங்களா இப்படிப் பிரிஞ்சு போயிட்டாங்கன்னு ஆச்சரியமாயிருக்குங்க. ஒரு நாள்கூட 'அவங்க' வீட்டிலே உரக்கக் கத்திப் பேசுறதை நான் கேட்டதில்லீங்க...''

ரவியின் குடும்பம் பிரிவுபட்டதைக் கேட்ட அதிர்ச்சியோடு அதிர்ச்சியாக, கந்தனின் மனைவியைப் பற்றி விசாரித்தேன்.

''ஏன் கந்தா ! உன் பெண்சாதி சௌக் கியமாயிருக்கிறாளா?.... உனக்குச் சோறு கொண்டு வருவாளே, இன்னும் வரவில் லையா ?'' என்று நாசூக்காகக் கேட்டேன்.

''இல்லீங்க!'' என்று தயங்கியவாறு தலை குனிந்தான் கந்தன்.

'சரி, நாம் நினைத்தபடிதான்! கந்தனும் விவாகரத்து செய்து கொண்டுவிட்டான் போலிருக்கிறது!'

''ஏன், பெண்சாதியோடே சண்டையா?''

''சண்டை எப்பவும் உள்ளதுதானுங்களே! இப்போ வேலாயி.... நாலு மாசம் முழுவாமலிருக்காங்க.... அதனாலே அவளைக் கஞ்சி கொண்டார வேணாமின்னு நானே சொல்லிவிட்டேன்'' என்று அசட்டுச் சிரிப் புச் சிரித்தான் அவன்.

''வெரிகுட்! ரொம்ப சந்தோஷம் கந்தா!'' என்று உற்சாக மிகுதியால், வாழ்த்துத் தெரிவித்தேன் நான்.

வீட்டுக்குத் திரும்பும் வழியில் எனக்கு ஒரே சிந்தனை.

வடிவமான ரப்பர்த் துண்டின் இரு முனைகளையும் எவ்வளவுதான் இழுத்துப் பிரித்தாலும் மீண்டும் நெருங்கி வந்து விடுவது போல், எத்தனையோ சண்டை சச்சரவுகளுக்குப் பிறகும், கந்தன் வேலாயி குடும்பம் நிலைத்து நீடிக்கிறது. ஆனால் மென்மையான பஞ்சு இழை, இழுத்ததும் பிரிந்து விடுவது போல், எப்போதும் குதூகலமும் மகிழ்ச்சியுமாய் இருந்த ரவி — நிர்மலா குடும்பம் பிரிந்து போய் விட்டது.

ரவியும் நிர்மலாவும் தங்களுக்கிடையே இயல்பாக 'எழக்கூடிய கருத்து வேற்றுமைகளையும் பூசல்களையும் பிணக்குகளையும் ஊடல்களையும் வெளியிடாமல், உள்ளுக்குள்ளேயே அடக்கி வைத்திருந்தார்கள் போலிருக்கிறது. படிப்பால் வந்த நாகரிக உணர்வு, அப்படி உணர்ச்சிகளை மனத்துக்குள்ளேயே அமுக்கி வைத்து விட்டதோ? உள்ளே அமுக்கி, அமுக்கி, அமுக்கி அமுக்கி வைக்கப்பட்ட உணர்ச்சிகள், மடை நிறைந்த வெள்ளம் வெளியேற வழியில்லாத கடையில் ஏரியையே உடைப்பது போல், உள்ளங்களையே உடைத்தெறிந்து விட்டனவோ? உணர்ச்சி ஊற்றெடுத்த போதெல்லாம் வெளியேற வடிகால் இல்லாததால், கடையில் உணர்ச்சிகள் குமுறிப் பொங்கி எரிமலையாகிவிட்டனவோ?

கந்தனும் வேலாயியும் தம் உள்ளத்து உணர்ச்சிகளை யெல்லாம் அப்போதைக்கப்போது வெளிப்படுத்தி, உள்ளத்தில் பாரமோ பளுவோ இல்லாமல் செய்துகொண்டதால் தான், வடிகால் மதகில் செல்லும் நீர்போல் தொடர்ந்து நிலையாக அவர்கள் வாழ்க்கை நடந்து செல்கிறதோ?

ஆழம் காண முடியாத மனித உள்ளங்களின் இயக்கத்தில் இப்படி ஒரு தத்துவமா?

## ▢ ▢ ▢ ▢ ▢ ▢ ▢ வட்ட மேஜை ■ ■ ■ ■ ■ ■ ■

"நைஜர் பாயும் நைஜீரியா" என்ற கட்டுரையில் அப்பகுதியின் கனி வளத்தைப் பற்றிக் கூறுமிடத்து, "நைஜீரியாவில் நிலக்கரி, இரும்பு, தகரச் சுரங்கங்கள் உள்ளன" என்ற குறிப்பு வருகிறது. இதில் தகரம் என்ற சொல் தவறான முறையில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. துத்தநாகம் அல்லது சயம் பூசிய இரும்புத் தகடுகளைக் குறிப்பது தகரம் என்ற சொல். இக்கட்டுரையில் டின் (Tin) என்ற ஆங்கில வார்த்தைக்கு வெள்ளீயம் என எழுதுதல் வேண்டும். வெள்ளீயத்துக்கும், சயம் பூசிய இரும்புத் தகடுகளுக்கும் 'டின்' என்ற ஒரே சொல் ஆங்கிலத்தில் வழங்குவதனால் ஏற்பட்ட குழப்பம் இது எனக் கருதுகிறேன். இம்மாதிரியான தவறுகள் சில பாடப்புத்தகங்களிலும் காணப்படுவது வருந்தத்தக்கதாயிருக்கிறது. விஞ்ஞானச் சொற்களைப் பொருட் குற்றமில்லாமல் ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்ப்பது மிக அவசியம்.

சென்னை—36
27—6—69 — வே. த. முத்தையா

"கல்வித் துறை குளறுபடிகள்" படித்தேன். புத்தகத்துக்கு என்று மூன்றாம் வகுப்புக்கு 30 ரூபாய் நான்காம் வகுப்புக்கு 40 ரூபாய் என்று பள்ளியில் வசூல் செய்வதாகச் சொல்கிறீர்கள். இங்கிலீஷ் மீடியம் புத்தகங்கள் கடைகளில் எளிதில் கிடைப்பது இல்லை. குழந்தைகளுக்குப் புத்தகம் வேண்டும் என்று பணத்தைப்போட்டு வாங்கிக் கொடுக்கிறோம். மேலும் இங்கிலீஷ் மீடியம் புத்தகங்கள் கம்பெனியிலேயே விலை அதிகம். கம்பெனி விலைக்குத்தான் நாங்கள் விற்கிறோம். பாடத்திட்ட விதிகள் இல்லை என்று சொல்வது தவறு. ஆங்கிலோ இந்தியன் ஸ்கூல் போர்டு, யூனிவர்சிட்டி மெட்ரிகுலேஷன் ஸ்கூல் ஆகியவைகளுக்கு வரையறுக்கப்பட்ட பாடத்திட்டம் உள்ளது. அதைத்தான் நாங்கள் நடத்துகிறோம். தேர்ச்சி பெற்ற ஆசிரியர்கள் இல்லை என்று சொல்வது பொருத்தமற்றது. பி.யூ.ஸி., பி.எஸ்ஸி., எஸ்.எஸ்.எல்.ஸி. படித்தவர்களுக்கு முதல் வகுப்பிலிருந்து எட்டாவது வகுப்பு வரை பாடம் நடத்த முடியாது என்று சொல்ல முடியுமா? ஆசிரியராகத் தேர்ச்சி பெற்றவர்கள் பலரின் தகுதி என்ன பாருங்கள்: பள்ளியில் ஐந்தாவது வகுப்பு வரை படித்துவிட்டு ட்யூட்டோரியல் காலேஜ் மூலம் எ.எஸ்.எல்.ஸி. பரீட்சை எழுதி சர்டிபிகேட் வாங்கி, டீச்சர்ஸ் ட்ரெயினிங் போய்ப் பட்டம் வாங்கியவர்கள்தான் இப்போது பல இலவசக் கல்விப் பள்ளிகளில் உபாத்தியாயர்களாக இருப்பவர்கள். இவர்களை விட எஸ். எஸ். எல்.ஸி., பி.யூஸி., பி.எஸ்ஸி., பி. ஏ. படித்தவர்கள் சொல்லிக் கொடுப்பது தரம் குறையாது. சர்க்காரின் எந்த விதமான உதவியும் இல்லாமல் அங்கீகாரமும் இல்லாமல் நல்ல பாடத் திட்டத்துடன் நல்ல கல்வி அறிவு வளர வேண்டும் என்றுதான் நர்சரி, கிண்டர் கார்டன் — இங்கிலீஷ் மீடியம் பள்ளிகள் நடத்தப்படுகின்றன. லாபம் மட்டும் நோக்கமல்ல. எந்த விதமான லாபமும் இல்லாமல் ஐந்து வருடங்களாக வருடம் ஒன்றுக்கு ரூ. 1200 நஷ்டத்தில்தான் எனது பள்ளி நடைபெறுகிறது. இதைப் போல் எத்தனை பள்ளிகளோ!

மதுரை—16
2—7—69 — எல். கிருஷ்ணமூர்த்தி
'கரஸ்பாண்டெண்ட், ஸ்ரீராம் பள்ளி

பொன்னித் துறைவனின் 'காயத்ரி' ஓர் அற்புதப் படைப்பு.

கல்வித் துறையில் உள்ள குளறுபடிகளை யெல்லாம் அப்படியே அப்பட்டமாகச் சொல்லியுள்ள ஒரே பத்திரிகை 'கல்கி' ஒன்றுதான். பெற்றோர்கள் படும் கஷ்டங்களையும், மாணவர்களின் இன்றைய நிலையையும் நன்றாக எடுத்துக் கூறியுள்ளார் பாணன்.

திண்டுக்கல்
3—7—69 — பி. எஸ். சிவமணி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப் படுத்தும்—இதர நோய்கள் பாதிக்கவும் இடமளிக்கும்

# வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்தி ஆரோக்கியமாகவும் சக்தியுடனும் திகழுங்கள்

இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைப்பதால், இதர நோய்கள் உங்களைப்பாதிக்கக்கூடும். எனவே தவறாது வாடர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வாருங்கள். பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டு, உடலுக்கு நோய்த்தடுப்புச்சக்தியை அளிக்கும் ஊட்டப்பொருள்கள் அடங்கியது வாடர்பரீஸ் காம்பவுண்ட். அதிலுள்ள க்ரியோஸாட் மற்றும் க்வயாகால் இருமலிலிருந்தும் ஜலதோஷத்திலிருந்தும் நிவாரணம் அளிக்கின்றன




**வாடர்பரீஸ் காம்பவுண்ட்—மிகவும் நம்பகமான டானிக்**

வார்னர்-ஹிந்துஸ்தான் லிமிடெட்

WH 7985 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon